உ

சிவமயம்.

அருணகிரிநாதசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்புகழ்-160.






இதன் விலை] [அணா-5

சென்னை-சூளை.

சங்கநிதிவிளக்க அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1924.

உ

சிவமயம்.

# திருப்புகழ்.

## காப்பு வெண்பா.

எல்லாரு ஞானத் தெளிஞ்சரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி.

## கலி விருத்தம்.

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவனு வாலே
ஒருத்தரை மதிப்பதில்லை யுன்றனரு ளாலே
பொருப்புக மிகப்பொருது வென்றுமயில மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெருமாளே.

## எண்சீர்கழிநெடில் ஆசிரியச் சந்த-விருத்தம்.

ஏறிமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
[illegible]ன் றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே

மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசல மமர்ந்த பெருமாளே.

---

விநாயகர் துதி.

1. தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன—தனதான.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணி
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுரைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும
அப்புன மதனிடை யிபமாகி

அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

சுப்பிரமணியர் துதி.

2. தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத்தன
தத்தத்தன தத்தத் தனதன—தனதான.

முத்தைத்தரு பத்தித்திருநகை
யத்திக்கிறை சத்திச்சரவண
முத்திக்கொரு வித்துக்குருபர னெனவோது
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித்திருவரு
முப்பத்துமூ வர்க்கத்தமரரு மடிபேணப்
பத்துத்தலை தத்தக்கணைதொடு
மொற்றைக்கிரி மற்றைப்பொருதொரு
பட்டப்பகல் வட்டத்திகிரியி லிரவாகப்
பத்தற்கிர தத்தைக்கடவிய
பச்சைப்புயன் மெச்சித்தருபொருள்
பட்சத்துடன் ரச்சித்தருளுவ தொருநாளோ
தித்தித்திசை யொக்கப்பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப்பயிரவி
திக்கொக்க நடிக்கக்கழுகொடு கழுகாடத்
திக்குப்பரி வட்டக்கலைகொடு
சித்ரப்பவு ரிக்குத்திகுதிகு
திக்குத்திகு திக்குத்ரிடக மெனவோதும்

சா திருப்புகழ்.

கொத்துப்பரை கொட்டக்களமிசை
குக்குக்குகு குக்குக்குகுகுகு
குத்திப்புதை புக்குப்பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற்றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக்குலகிரி
குத்துப்பட வொற்றைப்பொரவல பெருமாளே.

---

## திருப்பரங்கிரி.

௭. தனத்தனந்தன தனதனதனதன
தனத்தனந்தன தனதனதனதன
தனத்தனந்தன தனதனதனதன — தனதான

அருக்குமங்கையர் மலரடிவருடியும்
கருத்தறிந்தபி னரைதனிலுடைதனை
யவிழ்த்துமங்குள வரசிலைதடவியு மிருதோளுற்
றணைத்துமங்கையி னடிதொறுநகமெழ
வுதட்டைமென்றுப லிடுகுறிகளுமிட
வடிக்களந்தனின் மயில்குயில்புறவென மிகவாய்விட்
டுருக்குமங்கியின் மெழுகெனவுருகிய
சிரத்தையின்சிடு மனுபவ முறுபவ
முலகமையின்களி மிகவெனவிலகிய முலைமேல்வீழ்ந்
திருக்கலங்கிமெ யுருகிடவமுதரு
பெருத்தவுந்தியின் முழுகிமெயுணர்வற
வுழைத்திடுங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனோ

இருக்குமந்திர மொழிவகைமுனிபெற
வுரைத்தசமப்ரம சரவணபவகுக
விதத்தலிங்கித மிலகியவறுமுக வெழில்வேளென்

றிலக்கணங்களு மியலிசைகளுமிக
விரிக்குமம்பல மதுரிதகவிதனை
யியற்றுசெந்தமிழ்விதமொடுபுயமிசை புனைவோனே

செருக்குமம்பத மிசைதனி லசைவற
நடித்தசங்கரர் வழிவழியடியவர்
திருக்குருந்தடி யருள்பெறவருளிய குருநாதா

திருக்குழந்தையு மெனவவர்வழிபடு
குருக்களின்றிற மெனவருபெரியவ
திருப்பரங்கிரி யுறைபவசரவண பெருமாளே.

---

4. தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன—தனதான.

கருக்குமஞ்சன விழிபிணையயில்கொடு
நெருக்கிநெஞ்சுற வெறிதருபொழுதொரு
கனிக்குளின்சுவை யமுதகுமொழிசிறு நகையாலே

களக்கொடுங்கலி வலைகொடுவிசிறியெ
மனைக்கெழுந்திரு மெனமனமுருகவொர்
கவற்சிகொண்டிட மனைதனிலழகொடு கொடுபோகி

நறைத்தபஞ்சணை மிசைதனின்மனமுற
வளைத்தனந்தலி னிணைமுலையெதிர்பொர
நகத்தழுந்திட வமுதிதழ்பெருகிய மிடறாடே
நடித்தெழுங்குரல் குமுகுமுகுமுவென
விசைத்துநன்கொடு மனமதுமறுகிட
கழுப்புநஞ்சன சிறுமியடியாற வருள்வாயே
நிறைத்ததெண்டிரை மொகுமொகுமொகுவென
வுரைத்தகஞ்சுளி முடிநெறுநெறுவென
நிறைத்தவண்டமு கடுகிடுகிடுவென வரைபோலும்
நிவர்த்ததிண்கழ னிசிசரருரமொடு
சிரக்கொடுங்குவை மலைபுரைதாவிரு
நிணக்குழம்பொடு குருதிகள் சொரிதர வடிதீரா
திறற்கருங்குழ லுமையவளருளுரு
புழைக்கைமும்மத கயமுகமிகவுள
சிவக்கொழுந்தென கணபதியுடன்வரு மிளையோனே
சினத்தொடுஞ்சம னுதைபடநிறுவிய
பாற்துளன்புறு புதல்வநன்மணியுகு
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே.

5. தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன—தனதான.

சருவும்படி வந்தனனிங்கித
மதனென்றிடு மம்புலியுஞ்சுடு
தழல்கொண்டிடு மங்கையர்கண்களின் வசமாகி

சயிலங்குல மன்றலபொருந்திய
பொழிலின்பயில் தென்றலுமொன்றிய
தடமுஞ்சுனை துன்றியெழுந்திடு திறமான

இரவும்பக லன்றியுநின்றிடு
குயில்வந்திசை தந்தனவென்றிட
இருகண்கள் துயின்றிடவன்றியு மயலான

சிவனெஞ்சுப தம்பதமென்றிடு
மூடல்கொண்டுவ ருந்தியவஞ்சக
னினியுன்றன் மலர்ந்திலகும்பத மடைவேனோ

திருவென்றில் விளங்கியவண்டர்கள்
மனையின்றியி ருண்டவனெண்டிசை [ன்
திகழும்புகழ் கொண்டவன்வண்டமிழ் பயில்வோர்பி

திரிகின்றவன் மஞ்சுநிறம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள்வென்றடல்
செயதுங்கமுகுந்தன் மகிழ்ந்தருள் மருகோனே

மருவுங்கட றுந்துமியுங்குட
முழவங்கள் குமின்குமினென்றிட
வயலொன்றிய செந்திலில்வந்தருள் முருகோனே

மதியுங்கதி ரும்புயலுந்தின
மறுகும்படி யண்டமிலங்கிட
வளர்கின்ற பரங்கிரிவந்தருள் பெருமாளே.

6. தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான—தனதான.

வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலு
மதித்திடுங் கொண்டையாலு மனைவோரும்
வடுப்படுந் தொண்டையாலும்
விளைத்திடுஞ் சண்டையாலு
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல
மிகக்கெடுந் தொண்டனேனு
மெனப்படுக் கொந்தவாரி கரையேற
விசைத்திடுஞ் சகதபேத
மொலித்திடுந் தண்டைசூழு
மிணைப்பதம் புண்டரீக மருள்வாயே
சுரர்க்குலஞ் சஞ்செய்சூரன்
விளக்கிரௌஞ் சம்மதோடு
துளக்கெழுந் தண்டகோள மளவாகத்
துரத்தியன் றிந்த்ரலோக
மழித்தவன் சம்ப்ரதாயஞ்
சுடப்படுஞ் சண்டைவேலை விடுவோனே
செருக்கெழுந் தும்பர்சேனை
துளக்கவென் றண்டமூடுந்
தொனித்திடுஞ் சங்கபாணி மருகோனே

# திருப்புகழ்

தினைப்புனஞ் சென்றுலாவு
குறத்தியின் னன்பராகுந்
திருப்பரங் குன்றமேவு பெருமாளே.

---

௧. தனன தந்த தத்தத்தனந்த
தனன தந்த தத்தத்தனந்த
தனன தந்த தத்தத்தனந்த—தனதான.

கருவடைந்து பத்துற்றதிங்கள்
வயிறிருந்து முற்றிப்பயின்று
கடையில்வந்து தித்துக்குழந்தை வடிவாகி

கழுவியங்கெடுத்துச்சுரந்த
முலையருந்தி விக்கிக்கிடந்து
கதறியங்கை கொட்டித்தவழ்ந்து நடமாடி

அரைவடங்கள் கட்டிச்சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டிதண்டை
யவையணிந்து முற்றிக்கிளர்ந்து வயதேறி

அரியபெண்கணட்பைப்புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமியனுன்க்ருபைச்சித்தமென்று பெறுவேனோ

இரவியிந்ரன் வெற்றிக்குரங்கி
னரசரென்று மொப்பற்றவுந்தி
யிறைவனெண் கினக்கர்த்தனென்று நெடுநீல

னெரியனும் மருத்துச்சிறந்த
வனுமனென்று மொப்பபற்றவண்ட
ரெவருமந்தி வர்க்கத்தில்வந்து புனமேவ

அரியதன் படைக்கர்த்தனென்று
மசுரர்தன்கிளைக்கட்டைவென்ற
வரிமுகுந்தன்மெய்ப்பித்தபண்பின் மருகோனே

பயனேயும்ப டைத்துச்சினந்து
வுலகமும்ப டைத்துப்பரிந்து
வருள்பரங்கி ரிக்குட்சிறந்த பெருமாளே.

---

8. தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன—தனதான.

மன்றலங் கொந்துமிசை
தந்தனந் தந்தவென
வண்டினங் கண்டுதொடர் குழன்மாதர்

மண்டிடுந் தொன்மையமு
துண்டுகொண் டன்பின்மிக
வம்பிடுங் கும்பகன தனமார்பின்

ஒன்றவம் பொன்றவிழி
கண்டவங் கங்குழைய
வுந்தியென் கின்றமடு விழுவேனை

புஞ்சிலம் புங்கனக
 தண்டையுங் கிண்கிணியு
 மொண்கடம பும்புனையு — மடிசேராய்
பன்றியங் கொமபுகம
 டமபுயங் கஞ்சுரர்கள்
 மண்டையென் பங்கமணி — பவர்சேயே
பஞ்சரங் கொஞ்சுகிளி
 வந்திருந் தைந்துகர
 பண்டிதன் றம்பியெனும் — வயலூரா
சென்றுமுன் குன்றவர்கள்
 தந்தபெண் கொண்டுவளர்
 சண்பகம் பைம்பொன்மலர் — செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு
 மங்குலுந் தங்குமுயர்
 தென்பரங் குன்றிலுறை — பெருமாளே.

---

## திருச்செந்தில்.

௨. தனனதானன தந்தன தந்தன
 தனனதானன தந்தன தந்தன
 தனனதானன தந்தன தந்தன — தனதான.

கமலமாதுமருந்ததியுந்துதி
 செயவொணாத மடந்தையர்சந்தன
களபசீதள கொங்கையிலங்கையி — லிருபோதே

களவுநூல்தெரி வஞ்சனையஞ்சன
விழியின்மோகித கந்தசுகந்தரு
கரியவோதியி லிந்துமுகந்தனின் மருளாதே

அமலமாகிய சிந்தையடைந்தகல்
தொலைவிலாதவ றம்பொருளின்பமு
மடையவோதியுணர்ந்துதணிந்தபி னருள்தானே

யறியுமாறுபெ றும்படியன்பினி
னினியநாதசி லம்புபுலம்பிடு
மருணவாடக கிண்கிணிதங்கிய வடிதாராய்

குமரிகாளிப யங்கரிசங்கரி
கவுரிநீலிப ரமபரையம்பிகை
குடிலைகோகினி சண்டினிகுண்டலி யெமதாயி

குறைவிலாளுமை மந்தரியந்தரி
வெகுவிதாகடி சுந்தரிதந்தருள்
குமரமூஷிக முந்தியவைங்கர கணராயன்

மமவிநாயக னஞ்சுமிழ்கஞ்சுகி
யணிகஜானன னிம்பனொரம்புலி
மவுலியானொரு சிந்தையுகந்தரு ளிளையோனே

வளரும்வாழையு மஞ்சளுமிஞ்சியு
மிடைவிடாது நெருங்கியமங்கல
மகிமைமாநகர் செந்திலில்வந்தருள் பெருமாளே.

10. தனதனன தந்ததந்தன
தனதனன தந்ததந்தன
தனதனன தந்ததந்தன—தனதான,

இருகுழை யறிந்தகொண்டைக
ளொருகுமிழ டர்ந்துவந்திட *
யிணைசிலை நெரிந்தெழுந்திட வணைமீதே

யிருளளகபந்தி வஞ்சியி
னிருகலையு டன்குலைந்திட
விதழமுத ருந்துசிங்கியின் மனமாய

முருகொடுக லந்தசந்தன
மளறுபடுகுங்குமங்கமழ்
முலைமுகடு கொண்டெழுந்தோறு முருகா

முழுமதிபு ரந்தசிந்துர
வரிவையரு டன்கலந்திடு
மறிவிலன லமபிறந்திட வருள்வாயே

எரிவிடமி மிர்ந்தகுஞ்சியி
னிலவொடுவெ ழுந்தகங்கையு
மிதழியொ டணிந்தசங்கரர் களிகூர

இமையவர்த ருங்கருங்குயில்
மரகதநி றந்தருங்கிளி
யெனதுயிரெ னுந்த்ரியம்பிகை பெருவாழ்வே

---

* ,,ஒருமகிழியிடந்துலங்கிட" எனவும் பாடம்.

அரைவடம லம்புகிண்கிணி
    பரிபுரநெ ருங்குதண்டைக
    ளணிமணிச தங்கைகொஞ்சிட மயில்மீதே
யகமகிழ்வு கொண்டு சந்ததம்
    வருகுமர முன்றிலின்புற
    வலைபொருத செந்தில்தங்கிய பெருமாளே.

---

11. தந்ததானன தானன தந்ததானன தானன
தந்ததானன தானன — தனதான.

வெஞ்சரோருக மோகடு நஞ்சமோகய லோநெடு
    வின்பசாகர மோவடு வகிரோமுன்
வெந்துபோனபு ராதன சம்பராரிபு ராரியை
    வென்றசாயக மோகரு விளையோக
ணஞ்சமோயம தூதுவர் நெஞ்சமோவெனு மாமட
    மங்கைமாதர் பயோதர மிகமூழ்கி
சங்கையோவிரு கூதள கந்தமாளிகை தோய்தரு
    தண்டைசேர்கழ லிவது மொருநாளே
பஞ்சபாதக தாருக தண்டனிறெழ வானவர்
    பண்டுபோலம ராபதி குடியேற
பங்கயாசனர் கேசவ ரஞ்சவேலெண மால்வரை
    பங்கநீறெழ வேல்விடு மிளையோனே
செஞ்சடாடவி மீமிசை கங்கைமாதனி தாதகி
    திங்கள்சூடிய நாயகர் பெருவாழ்வே

துளைகள் விடுகழை விரன்முறை தடவிய
விசைகள் பலபல தொனிதரு கருமுகில் [னே
சுருதியுடையவ னெடியவன் மனமகிழ் மருகோ
துணைவகுணதர சரவணபவநம
முருககுருபர வளரறுமுககுக [ளே.
துறையிலலையெறி திருநகருறைதரு பெருமா

---

13. தந்ததனதான தந்ததனதான
தந்ததனதான—தனதான.

கன்றிவருநீல குங்குமபடீர
கஞ்சமலர் மேவு முலைகாட்டிக்
கங்குல்செறிகேச நின்றுகுலையாமை
கணைகள் கடைகாட்டி விலைகாட்டி
தண்டுபொருடா வென்றுவிலைபேசி
தம்பிவிடுமாத ருடனொட்ட
நஞ்சுபுசிதேள ரங்கமதுவாக
நைந்துவிடுவேனுக் கருள்வாயே
குன்றிமணிபோல செங்கண்வரிநாகம்
கொண்டபடம்வீசு மணிகூர்வாய்
கொண்டமயிலேறி குன்றிடியமோதி
சென்றவடிவேலைக் கொடுபோர்செய்
மன்றல்கமழ்பூக தெங்குதிரள்சோலை
துன்றுபடவாவி புடைசூழு

மந்திரடமாடுஞ் செந்தில்நகர்மேவு
மந்தசுரகாலப் பெருமாளே.

---

14. தனத்தந்தானன தானன தானன
தனத்தந்தானன தானன தானன
தனத்தந்தானன தானன தானன — தனதானா.

அணிச்சங்கார்முகம் வீசிடமாசறு
துவட்பஞ்சானத டாகம்விடாமட
வனத்தின்றாவிரு லாவியசீறடி மடமாத
ரருக்கன்போலொளி வீசியமாமர
கதப்பைம் பூணணி வார்முலைமேன்முக
மழுத்தும்பாவியெ னாவியீடேறிட நெறிதாராய்
வினைச்சண்டாளனை வீணனைநீணிதி
தனைக்கண்டாணவ மானநிர்மூடனை
விடக்கன்பாய்நுகர் பாழனையோர்மொழி பகராதே
விகற்பங்கூறிடு மோகவிகாரனை
யறத்தின்பாலொழு காதமுதேவியை
விழித்துன்பாதுகை நீதரநானருள் பெறுவேனோ
முனைச்சங்கோலிடு நீலமகோததி
யடைத்தஞ்சாதவி ராவணனீள்பல
முடிக்கன்றோர்கணை யேவுமிராகவன் மருகோனே
முளைக்குஞ்சீதநி லாவொடுபாய்விரி
திரைக்கங்காநதி தாதகிகூவிள
முடிக்குஞ்சேகரர் பேரருளால்வரு முருகோனே

தினைச்செங்கானக வேடுவரானவர்
திகைத்தந்தோவென வேகணியாகிய
திறற்கந்தாவள்ளி நாயகிகாமுறு மெழில்வேலா
சிறக்குந்தாமரை யோடையின் மேடையில்
நிறக்குஞ்சூல்வளை பால்மணிவீசிய
திருச்செந்தூர்வரு சேவகனேசுரர் பெருமாளே.

---

திருப்பழனிமலை.

15. தனனதன தானதந்த தனனதன-தானதந்த
தனனதன தானதந்த--தனதான.

கருவினுரு வாகிவந்து வயதளவிலேவளர்ந்து
கலைகள்பல வேதெரிந்து மதனாலே
கரியகுழல் மாதர்தங்க ளடிசுவடு மார்புதைந்து
கவலைபெரி தாகிநொந்து மிகவாடி.
அரகரசி வாயவென்று தினமுநினை யாமனின்று
மறுசமய நீதியொன்று மறியாமல்
அசனமிடு வார்கடங்கள் மனைகடலை வாசனின்று
அநுதினமு நாணமின்றி யழிவேனோ
உரகபட மேல்வளர்ந்த பெரியபெரு மாளரங்க
ருலகளவு மான்மகிழ்ந்த மருகோனே
உபயகுல தீபவங்க விருதுகவி ராஜசிங்க
முறைபுகலி யூரிலன்றி வருவோனே

பரவைமனைமீதிலன்று ஒருபொழுதுதூதுசென்ற
பரமனருளால்வளர்ந்த குமரேசா
பலைசுரர்சேனைகொன்று வமரர்சிறைமீளவென்று
பழனிமலை மீதினின்ற பெருமாளே.

---

16. தனதன தத்ததானன
தனதன தத்ததானன
தனதன தத்ததானன—தனதான.

கதியை விலக்குமாதர்கள்
புதியவி ரத்ன பூஷண
கனதன வெற்புமேன்மிகு மயலான
கவலைம னத்தனுகிலு
முனதுப்ர சித்தமாகிய
கனதன மொத்தமேனியு முகமாறும்
அதிபல வச்ரவாகுவு
மயிலுனி வெற்றிவேலையு
மரவுபி டித்ததோகையு முலகேழு
மதிரவ ரற்றுகோழியு
மடியர் வழுத்துவாழ்வுறு
மபிநவ பத்மபாதமு மறவேனே
இரவிகு லத்திராசத
மருவியெ திர்த்துவீழ்கடு
ரணமுக சுத்தவீரிய குணமான

விளையவ னுக்குநீண்முடி
  யாசது பெற்றுவாழ்வுற
  இராதந டத்துராகன் மருகோனே
பதினொரு ருத்திராதிகள்
  திசழவி ளக்குமாளிகை
  பரிவொடு நிற்குமீசுரர் சுரலோகம்
பரிமள கற்பகாடவி
  யரியளி சுற்றுபூவுதிர்
  பழநிம லைக்குண்மேவிய பெருமாளே.

---

17. தானதந்ததனத் தானதந்ததனத்
  தானதந்ததனத்—தனதான.

காரணிந்தவரைப் பாரடைந்துவினைக்
  கேதுனெஞ்சயரத் தடுமாறி
காணரம்புதிரத் தோல்வழும்புறுபொய்க்
  காயமொன்று பொறுத் தடியேனுந்
தாரணங்குகுழற் கூரணிந்தவிழிச்
  சாபமொன்றுநுதற் கொடியார்தந்
தாள்பணிந்தவர்பொற் றோள்விரும்பிமிகத்
  தான் மெலிந்துவிடத் தகுமோதான்
சூர்துண்டுபடப் போர்கடந்துதொழத்
  தோயமுஞ்சுவறப் பொருவேலா

தூய்மைகொண்டகுறத் தோகைநின்றபுனச்
 சூழ்பெருங்கிரியிற் றிரிவோனே
ஆரணங்கருடத் தாரனன்புகழ்தற்
 காலமுண்டவருக் குரியோனே
ஆலையம்பழனச் சோலையின்புடைசுற்
 றூணினன்குடியிற் பெருமாளே.

---

திருவேரகம். (சுவாமிமலை.)

18. தனதனன தனதனன தனதான தத்ததன
 தனதனன தனதனன தனதான தத்ததன
 தனதனன தனதனன தனதான தத்ததன—தனதானா.

குமரகுரு பரமுருக குகனேகு றச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகாபி றைச்சடையர் [தே
குருவெனவ னுறையுதவு மயிலாவெ னத்தினமு முருகா
குயின்மொழிநன் மடவியர்கள் விழியாலு ருக்குபவர்
தெருவிலனவரதமன மெனவேநடப்பர்நகை [லுங்
கொடுமைவர்களுடைமைமன முடனேபறிப்பவர்க ளிலே மா
தமதுவச முறவசிய முகமேமினுக்கிபர்கள்
முலைபிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள் [லே
தனமலிபர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண் வலையா
சதிசெய்பவ ரவர்மகிழ வணைமீது ருக்கியர்கள்
வசமுழுகி யவரடிமை யெனமாத ரிட்டதொழில்
தனிலுழலுமசடனையு னடியேவழுத்தவரு டருவாயே

சமரமொடு மசுரர்படை களமீதெதிர்த்தபொழு
தொருநொடியிலவர்கள்படை கெடவேலெடுத்தவலி
தனினிருதர் சிரமுருள ரணதூள் படுத்துவிடு செருமீதே
தவனமொடு மலைகைநட மிடவீர பத்திரர்க
ளதிரிணமொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய் [டு
தசைவுணவுதனின்மகிழும் விடுபேயநிரைத்திரள்கள் பலகோ
திமிதமிட நரிபொடிகள் கழுகாடரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியாயுதத்தைவிடு
திமிரதினகரவமரர் பதிவாழ்வு பெற்றுலவு முருகோனே
திருமருவு புயனயனு டயிராவ தக்குரிசி
லடிபரவு பழனிமலை கதிர்காம முற்றுவளர்
சிவசமய வறுமுகவ திருவேரகத்திலுறை பெருமானே.

---

19. தனனதனத்த தனனதனத்த
தனனதனத்த—தனதான.

மருவேசெறித்த குழலார்மயக்கின்
மதனாகமத்தின் விரகாலே
மயலேயெழுப்பி யிதமாயருத்தி
மலைநேர் முலைக்கு ளுறவாகி
பெருகாத லுற்றதமி யேனைநித்தல்
பிரியாதபட்ச முடனேயெண்
பிழையேபொறுத்து னிருதாளிலுற்ற
பெருவாழ்வுபற்ற வருள்வாயே

குருவாயரர்க்கு முபதேசவைத்த
குகனேகுறத்தி மணவாளா
குளிர்காவமிகுத்த வளர்போதமுற்ற
குடகாவிரிக்கு வடபால்வாழ்
திருமாறனைக்கு மருகாவுமைக்கொர்
சிறுவாகரிக்கு மிளையோனே
திருவேரகத்தி னுறைவாயரக்கர்
சிரமேதுணித்த பெருமாளே.



20\. தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன—தனதான.

கோமளவெற்பினை யொத்ததனத்தியர்
காமனையொப்பவர் சித்தமுருக்கியர்
கோவையிதழ்க்கனி நித்தமும்விற்பவர் மயில்போலே
கோகிலநட்புற வொத்திடுபுட்குர
லாரணியப்புள்வ கைக்குரல்கற்றியர்
கோலவிழிக்கடை யிட்டுமருட்டியர் விரகாலே
தூயமலர்பளி மெத்தைப்படுப்பவ
ராரையுமெத்திம னைக்குளழைப்பவர்
சோலைவனக்கிளி யொத்தமொழிச்சியர் நெறிகூடா
தூசுநெகிழ்த்தரை சுற்றியுடுப்பவர்
காசுபறிக்கும யக்குமுயக்கியர்
தோதகவித்தைப டித்துநடிப்பவ ருறவாமோ

மாமரமொத்துமலைக்குணெருக்கிப
சூரனைவெட்டிநிணக்குடலைக்கொடு
வார்புவிமெச்சவழித்தவிலட்சண — கதிர்காம
மாமலையிற்பழநிப்பதியிற்றனி
மாகிரியிற்றணிகைக்கிரியிற்பரி
மாகிரியிற்கிரி சுற்றிவளைத்திடு — மலைவாயில்
ஏமவெயிற்பெறு வெற்பிணிணற்பதி
னுலகத்துள பத்தர்கள்சித்தம
தேதுநினைத்தது மெத்தவளித்தரு — ளிளையோனே
வேரகவெற்பெனு மற்புதமிக்கசு
வாமிமலைப்பதி மெச்சியசற்சன
ராசதலட்சண வுத்தமிபெற்றருள் — பெருமாளே.

---

குன்றுதோறாடல்.

21. தந்தன தானதான தந்தன தானதான
தந்தன தானதான — தனதான.

பஞ்சகலோபமூடர் தம்பொருளூர்கடேடி
மஞ்சரிகோவைதூது — பலபாவின்
வண்புகழ்வாரிகாரி யென்றிசைவாதுகூறி
வந்தியர்போலவீணி — லழியாதே
செஞ்சரணாதகீத கிண்கிணிநீலமாலை
திண்டிறல்வேல்மயூர — முகமாறும்
செந்தமிழ்நாளுமோதி யுய்ந்திடஞானமூறு
செங்கனிவாயிலோர்சொ — லருள்வாயே

பஞ்சவனீடுகூனு மொன்றிடுதாபமோடு
　　பைந்தமிழ் வாதுகூறு　　　　　　　　சமண்மூகர்
பண்பறு பீலியோடு வெங்கழு வேறவோது
　　பண்டிதஞானநீறு　　　　　　　　　　தருவோனே
குஞ்சரசாலிமேவு பைம்புனமீதுலாவு
　　குன்றவர்சாதிகூடி　　　　　　　　　வெறியாடி
கும்பிடுகாடுவாழ்வு தந்தவரோடுவீறு
　　குன்றுதொருடன்மேவு　　　　　　　பெருமாளே.

---

## தென்கடம்பன் றுறை.

22. தனனதன தந்தனந் தந்தனந் தந்தனக்
　　தனனதன தந்தனந் தந்தனந் தந்தனந்
　　தனனதன தந்தனந் தந்தனந் தந்தனந்-தனதான.

　புணரியு மனங்கனம் புஞ்சரும் புங்கருங்
கயலொடு கெண்டையுஞ் சண்டனுங் கஞ்சமும்
புதுவலவ ருந்தியுந் துஞ்சநஞ் சும்பொருப்　　　பெறிவேலும்
　பொருவெனவி கன்றகண றங்குமிங் குஞ்சுழன்
றிடைகடைசி வந்தவஞ் சம்பொதிந் திங்கிதம
புவியிளைஞர் முன்பயின் றம்பொனின் கம்பிதக்　　குழைமோதி
　குணலையொடு மிந்த்ரியஞ் சஞ்சலங்கண்டிடும்
படியமர்புரிந்தருஞ் சங்கடஞ்சந்ததங்　　　　　　　[பால்
கொடுமைசெய்து சங்கொடுஞ் சிங்கிதங் குகைகடை　கனிஞர்

## திருப்போரூர்.

24. தனத்தா தானதந்த தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த—தனதான.

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்க
ளுரைத்தேன் வாலசத்ர நுதனூலை
முருச்சேர் நீண்மருங்குல்
பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பாய் மேல்விழுந்து திரியோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
கலைக்கே யோடிமின்ப
வலைக்கே பூணுநெஞ்ச னதிபாவி
[illegible]டால் மூடுகின்ற
மசக்கால் மாயுமிந்த
வவத்தா லீனனேற்கெ னருள்வாயே
[illegible]ருக்கார் தாளிதும்பை
மருச்சேர் போதுகங்கை
யினைச்சூ டாதிநம்பர் புதல்வோனே
இருக்கா லேமினைந்து
துதிப்பார் நாவிநெஞ்சி
லிருப்பா யானைதங்கு மணிமார்பா

செருக்காலேமிகுத்த
கடறசூர் மாளவென்ற
திறசேர் வேல்கைகொண்ட முருகோனே

தினைக்கோர் காவல்கொண்ட
குறத்தேன் மாதுபங்க
திருப்போ ரூரமர்ந்த பெருமானே.

---

25 தான தானன தானன தான தானன தானன
தான தானன தானன—தனதான.

சீருலாவிய வோதிம
மானமாநடை மாமயில்
சேயசாயல் கலாமதி முகமடவார்

தேனுலாவிய மாமொழி
மேருமாமலை மாமுலை
சேலுலாவிய கூர்விழி குமிழ்நாசி

தாருலாவிய நீள்குழல்
வேயுலாவிய தோளியர்
சார்பிலேதிரி வேனினி யருளாலே

சாமவேதியர் வானவ
ரோதிநான்மலர் தூவிய
தாளில்வீழவே ஞானக வருள்வாயே

காருலாவிய நீள்புன
 வேடர்மால்வரை மீதுறை
 காவல்மாதினொ டாவல்செய் தருள்வேளே
காணவாகம வேதபு
 ராணநூலினி னோதிய
 காரணாகரு ணாகர முருகோனே
போருலாவிய சூரனை
 வாரிசேறெழ வேல்விடு
 பூவைசேவக மாமயின் மிசையோனே
போதன்மாதவன் மாதுமை
 பாதியாதி தொழாவரு
 போரிமாநகர் மேவிய பெருமாளே.

---

## திருச்செங்கோடு.

௨௫. தந்தாதனந்த தந்தாதனந்த
 தந்தாதனந்த — தந்தானே.

பந்தாடியங்கை நொந்தார்பரிந்து
 ளைபைந்தார் புனைந்த குழன்மீதே
பண்பார்சுரும்பு பண்பாடுகின்ற
 பங்கேருகங்கொண் முகமீதே
மந்தாரமன்றல் சந்தாரமொன்றி
 வண்பாதகஞ்செய் தனமீதே
மண்டாசைகொண்டு விண்டாவிசைந்து
 மங்காமலுன்ற னடிதாராய்

சிந்தூரவான்றன் மைந்தாவிளங்கு
கன்றூமுகுந்தன் மருகோனே
கண்டோர்புகழ்ந்த நங்கார்மடந்தை
கந்தாவரம்பை மணவாளா
செந்தாரடைந்த கொந்தார்கடம்பு
திண்டோளிரம்ப வணிவோனே
திண்கோடடர்ந்த வெண்கோடுறங்கு
செங்கோடமர்ந்த பெருமாளே.

## பழமுதிர்சோலை.

27. தனதன தானதான தனதன தானதான
தனதன தானதான—தனதான.

இலவிதழ் கோதிநீதி மதலையாரபார
விளநகை யாடவாட மிகவா[illegible]ற்
றெதிர்பொரு கோரபாரம் ருகமதகோலகால
விணைமுலை மார்பிலேற மதராசன்
கலவியி லோடிநீடு வெகுவித ராகபோக
கரணப்ர தாபலீலை மடமாதர்
கலவியின் மூழ்கியாழ மிழிதொழிலேனு மீது
கருதியஞானபோத மடைவேனோ
கொலைபுரி காளிசூலி வயிரவி நீலிமோடி
குலிசகுடாரியாயி மகமாயி

3

குமரிவ ராகிமோகி பகவதியாதிசோதி
குணவதி யாலமுணி யபிராமி
பலிகொள்க பாலியோகி பரமகல் யாணிலோக
மதிவ்ரதை வேதஞானி புதல்வோனே
படையொடு சூரன்மாள முடுகிய சூரதீர
பழமுதிர் சோலைமேவு பெருமாளே.

---

## சோலைமலை.

28. தானதன தந்ததந்த தானதன தந்ததந்த
தானதன தந்ததந்த—தனதான.

வாரணமு கங்கிழிந்து
வீழவும ரும்பலர்ந்து
மால்வரைய சைந்தனங்கள் முடிசாய
வாளகிரி யண்டரண்ட
கோளமுற நின்றெழுந்து
மாதவம றந்திறந்து நிலைபேர
பூரணகு டங்கடிந்து
சீதகள பப்புனைந்து
பூசலைவிரும்புகொங்கை மடவார்தம்
போகசய னந்தவிர்ந்து
ஞானகப தம்பணிந்து
பூசனைசெய் தொண்டனென்ப தொருநாளே

ஆரணமு ழங்குகின்ற
　　வாயிரம டந்தவங்க
　　வாகுதியி டங்கள்பொங்கு　　　　நிறைவீதி
ஆயிரமு கங்கமழ்ந்து
　　நூபுரமி ரங்குகங்கை
　　யாரமர வந்தலம்பு　　　　துறைசேரத்
தோரணம லங்குதுங்க
　　கோபுரநெ ருங்குகின்ற
　　சூழ்மணிபொன் மண்டபங்கள்　　　　ரவிபோலச்
சோதியின்மி குந்தசெம்பொன்
　　மாளிகைவி ளங்குகின்ற
　　சோலைமலை வந்துகந்த　　　　பெருமாளே.

---

சீபுருடமங்கை.

29. தான தன தந்த தான தன தந்த
　　தான தன தந்த — தனதான.

வேனின்மதனைந்து பாணம்விட நொந்து
　　வீதிதொறு நின்று　　　　மடவார்பால்
வேளையெனவந்து தாளினில்விழுந்து
　　வேடைகெட நண்பு　　　　பலபேசி
தேனினுமணந்த வாயமுதமுண்டு
　　சீதளதனங்க　　　　ளினின்மூழ்கி

தேடியதனங்கள் பாழ்படமுயன்று
சேர்கதியதின்றி யுழல்வேனே
ஆனிரைதுரந்து மாநிலமளந்தோ
ராலிலையிலன்று துயின்மாய
னுயர்மனைசென்று பாறயிரளைந்த
வாரணமுகுந்தன் மருகோனே
வானவர்புகழ்ந்து தானவர்பயங்கொள்
மாெனாடு விளங்கு மணிமார்பா
மாமறைமுழங்கு சீபுருடமங்கை
மாநகரமர்ந்த பெருமானே.

---

பழனி.

௬0 தனன தந்தன தந்தனதன
தனன தந்தன தந்தனதன
தனன தந்தன தந்தனதன—தந்ததான.

கனகுகும்பமி ரண்டு நேர்மலை
யெனநெருங்குகு ரும்பைமாமணி
கதிர்சிறந்துவ டங்குலாவிய மர்ந்தகுதங்
கடையினின்றுப ரந்துகாவொரு
மிளகிவிஞ்சியெ ழுந்தகோமள
களபகுங்கும கொங்கையானவை யின்பமாகி
அனைவருங்கொளு மென்றுமேல்விலை
யிடுமடந்தையர் தங்கடோதக
மதின்மருண்டிது வண்டனுசையு முந்துபாய

அவசமன்கொளு மின்பசாகர
முழுகும்வஞ்சக நெஞ்சையேயொழி
தருபதங்கதி யெம்பிரானரு டந்திடாயோ
தனன தனந்தன தந்தனதன
டிகுகுடிங்குகு டிங்குபேரிகை
தகுகுதிந்திகு திந்ததோவென வொன்று தாளந்
தமரசஞ்சல சஞ்சலாவென
முழுவுடுண்டுடு டுண்டுடேவென
தருணகிண்கிணி கிண்கிணாரமு ழங்கவோதி
பணிபதங்கய வெண்டிசாமுக
கிரியடங்கலு மண்டகோளகை
பதறிநின்றிட வந்தவாடக மென்றதோகை
பவுரி கொண்டிட மிண்டியேவரு
நிசிசரன்கிளை கொன்றவேல்கொடு
பழநியங்கிரி யின்கண்மேவிய தம்பிரானே.

---

திருவேங்கடம்,

31. தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன—தனதான.

வரிசேர்ந்திடு சேல்கணை யோவெனு
மிருள்போன்றிடு வேளையுநீலமும்
வடுவாங்கிடு வேல்விழி மாதர்கள் வலையாலே

வளர் கோங்கிள மாமுகையாகிய
தனவாஞ்சையி லேமுகமாயையில்
வளர்மாந்தளிர் போனிறமாகிய வடிவாலே

இருள்போன்றிடு கார்குழனீழலி
னிழைசேர்ந்திடு பாயலின்மீதுர
வினிதாங்கனிவாயமு தூறல்கள் பருகாமு

னெமதாந்தன மானவை போனபி
னெவர்வேண்டுவ ராகிலமேயினி
யிவைநீங்கிட வேயிருதாளிணை யருள்வாயே

கரிவாம்பரி தேர்திரள் சேனையு
முடனாந்துரி யோதனனாதிய
ரவர்மாண்டிட வேயொரு பாரத மதிலேகிக்

கனபாண்டவர் தேர்தனிலேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்

திரைநீண்டிரை வாரியும் வாலியு
நெடுவான் பயின் மாமர மேழொடு
தெசமாஞ்சிரம் ராவண னார்முடி பொடியாக

சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவெங்கடமாலை மேவிய பெருமாளே.

32. தானதத்தன தத்தன தத்தன
தானதத்தன தத்தன தத்தன
தானதத்தன தத்தன தத்தன—தனதான.

ஆலம்வைத்தவி ழிச்சிகள் சித்தச
னாகமக்கலை கற்றச மர்த்திக்
ளார்மனத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே
யாரவட்டமு லைக்குவி லைப்பண
மாயிரக்கல மொட்டிய லக்கினு
மாசையைப்பொரு ளாக்கநொடிப்பவ ருடன்மாலா
மேனிலைப்புமு சிப்பும வத்தையு
மாயெடுத்தரு லைப்பொடு பத்தமு
மேல்கொளத்தலை யிட்டவி திப்படு யெனுமாறும
வேல்கணைக்கிரை யிட்டுட லெத்தனை
பாடுபட்டபு ழுக்கம லக்குகை
வீடுகட்டியு ருக்குமெ னக்குநி ன்ருள்தாராய்
பீலிமிச்சம யிற்றுர கத்தினி
லேறிமுட்டிவ ளைத்துவ யிற்றுடல்
பீறலுற்ற யுத்தக ளத்தினில் மடியாத
போரக்கரெ திர்த்தவ ரெத்தனை
பேரையுக்ரக ளப்பலி யிட்டுடல்
பேய்கைகொட்டி நடித்தும ணிக்கழு குடனூடே
ஏலம்வைத்தபு யத்தில ணைத்தொரு
வேலெடுத்தச மர்த்தையு டைப்பவர்
யாவருக்கும னத்தினி னைப்பவை யருள்வோனே

எழிசைத்தமி ழிற்பய னுற்றவெ
ஞலுற்றடி யிற்பயி லுத்தம
னீசன்முக்க ணிருத்தன ளித்தருள் பெருமாளே.

திறக்கற்குடி.

33. தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத்—தனதான.

குடத்தைத் தகத்துக் களிற்றைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்
குலத்தைக் குமைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத் துவத்துற் றவர்சோரப்
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட் டசச்சுத் தனமாதர்
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
புரித்துப் பதத்தைத் தருவாயே
கடத்துப் புனத்துக் குறத்திக் குமெத்தக்
கருத்திச் சையுற்றுப் பரிவாக
கணக்கப் ரியப்பட் டகப்பட் டுமைக்கட்
கடைப்பட் டுதிற்கைக் குரியோனே
தடத்துற் பணித்து சுவர்க்கத் தலத்தைச்
சமைப்பித் தகொற்றத் தனிவேளா
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்கு
தருக்கற் குடிக்குட் பெருமாளே

## திருமயிலை.

34. தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன — தனதான.

அளகபார மலைந்துச ரிந்திட
வதனமேர்வுது லங்கிந லங்கமழ்
வதிக மோகம்வி ளைந்துக லைந்துறை குயில்காடை
யளியு ருமயி லென்றுசொ லுங்குரல்
பிடற தாதுதி பங்கவி தஞ்செயு
மகளிர் தோதக வன்பினின் றுள மருகாதே
உளம்வி டாதுபு கழ்ந்து பணிந்திட
வறிவி லாதம னங்கொடு நின்றினி
யுலையு ருமனு வந்தனை நண்பொடு சிவயோகத்
துருகு ஞானப ரம்பர மந்திர
பறுகொ ணுதப தந்தரு சிந்துர
வுபய சீதள பங்கய நின்கழ லருள்வாயே
இளகி டாவகை சந்தன குங்கும
களப பூரண கொங்கை நலம்புனை
யிரதிவேழ்பணி தந்தையுகந்தரு ளிளையோனே
யினிய தாயெதி ரிந்திர ரண்டரு
மரக ராசிவ சங்கர சங்கர
வெனமி காவரு நஞ்சினை யுண்டவ ரருள்பாலா

வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவிரோதமி டுங்குல சம்ப்ரம
மகர வாரிக டைந்தநெ டும்புயல் மருகோனே
மதுர வாசக மிஞ்சிய கிஞ்சுக
விதழிமாதுமை மைந்த விரும்பொழில்
மயிலை மீதினில் வந்துறையிந்திரர் பெருமாளே.

---

## திருவருணை.

35. தனனாதனனத் தனனாதனனத்
தனனாதனனத்—தனதான.

அருமாமதனைப் பொருவாள்கயல்குத்
தயிலார்யனக் கொடியார்த
மழகார்தனநற் புழுகார்சயிலத்
தணையாவலிகெட் டுழல்தாழ
இருமாநடைபுக் குழைபோயுணர்வற்
றிளையாவுளமுட் குயிர்சோர
எரிவாய்நரகிற் புகுதாதபடிக்
கிருபாதமெனக் கருள்வாயே
ஒருமால் வரைதட்டிருகூ றிடவுற்
றொருவேறனைவிட் டெறிவோனே
உறமான் மறவக் குறமாமகளுக்
குருகா திருபொ புயவீரா

திருமால்கமலப் பிரமாவிழியிற்
றெறியாவவனுக் கரியோனே
செழுநீர் வயல்சுற் றருணைபுரியிற்
றிருவீதியினிற் பெருமாளே.

---

பொது.

36. தனனதான தானன தனனதான தானன
தனனதான தானன — தனதான.

ஆதலசேட னாட வகிலமேரு மீதாட
வபினகாளி தானாட வவளோடன்
றதிரவீசி வாதாடும் விடையிலேறு வாராட
வகிலபூத வேதாள மவையாட
மதுரவாணி தானாட மலரில்வேத னாட
மயிலுமாட நீயாடி வரவேணும்
கதைவிடாத தோள்வீம னெதிரியான போர்மீளி
கருதொணாத மாசேனை பொடியாகக்
கதருகாலி போய்மீள விசயனேறு தேர்மீது
கதிர்கொள்வீறு கோடேதி யலேமோது
முதகிமீதி லேசாயு முலகமூடு சீர்பாத
வுவணவூர்தி மாமாயன் மருகோனே

யுதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜ
ஜுளமுமாட வாழ்தேவர் பெருமாளே

— —

யாழ்ப்பாணம்.

37. தாத்தா தானந் தத்தன தனதன
தாததா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன—தனதான.

பூத்தார் சூடுங் கொத்தலர் குழலியர்
பார்த்தால்வேலுங்கட்கமு மதன்விடு
போர்க்கார் நீடுங் கட்சர மொடுநமன் விடுதூதும்
போற்றார்நாளுங் கைப்பொரு ளுடையவர்
மேற்றுளார்தம் பற்றிடு ப்ரமையது
பூட்டாமாயங் கற்றமை விழியின ரமுதூரல்
வாய்த்தார்பேதஞ் செப்புபொய் விரகியர்
நோற்றேநூலின் சிற்றிடை யிடைபட
வாட்டாய்வீசுங் கர்ப்புர மிர்கமத மகிலாரு
மாப்பூணாரங் கச்சணி முலையினர்
வேடபூணுகங் கெட்டன னுனதுமெய்
வாக்கான்ஞானம் பெற்றினி வழிபட வருளாயோ
ஆத்தாள் மால்தங் கச்சிக னியையுமை
கூத்தாடானந் தச்சிவை திரிபுரை
யாட்பேய்பூதஞ் சுற்றிய பைரவி திரிலோக

மாக்கர யாவும் பற்றிய பரிபுரை
நோக்காடேதுஞ் செற்றன திருவிளை
யாட்டாலீசன் பக்கம துறைபவள் பெறுசேயே
ஏத்தாநாளுந் தர்ப்பண செபமொடு
தீர்த்தார்ஞானம் பற்றிய குருபர
பார்ப்பாராயுஞ் சொற்றமி ழருடரு முருகோனே
யேற்போர்தாம்வந் திம்மையின் மகிழ்வொடு
வாய்ப்பாய்வீசும் பொற்பரவை நெடுமதில்
யாழ்ப்பாணயன் பட்டின மருவிய பெருமாளே.

---

## பொது.

௩௮. தனனதன தனனதன தானான தானதன
தனனதன தனனதன தானான தானதன
தனனதன தனனதன தானான தானதன-தந்ததான.

உறவின்முறை கதறியழ வூராறு மாசையற
பறைதிமிலை முழவினிசை யாகாச மீதுமுற [ளி
வுலகிலுள பலரிசி வாய்மீதிலே சொரியு மந்தநா
ளுனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வாகாது நீள்கழியு
முபயபத மிசைசுருளை சீராறு நூபுரமு மந்தமார்பு
மறையறையு மமரர்தரு பூமாரி யெசொரியு
மதுவொழுகு தரளமணி பீதேமு நூலுமொரு [கூடி
மயிலின்மிசையழகுபொலி தாளாவுன்னலடியர் வந்து

மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
மதலையொறுகுதலையடிநாயேனையாள விங்ஙன் வந்திடவேயோ
பிறையெயிறு மிரணசுரர் பேராது பாரில்விழ
வதிரவெழு புவியுலக மீதேழு மோலமிடு
பிடிகளிறு வரிநிறைகள் பாழாகமீவ திசையி; னின்றநாகம்
பெரியநெடு மலையிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடையமாகாளிகூளியொடு [திரா
பிணநிணமு முணவுசெய்து பேயோடு பாடல்செய வென்ற
குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருடு
காடிபுலி கிளிகடிய மாறாத காவன்மிகு
குளிர்கணியி னிளமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவி
கொடியதொடு முயலகனில் மீதாடு வாருடைய
வொருபுறம துறவளரு மாதாவெ ருவருள்செய்
குமரகுரு பரவமரர் வானாடர் பேணவருள் தம்பிரானே.

---

## திருப்பழநிமலை.

39. தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதத்தனதத்—தனதான.

கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமாத் தையுடற் பொறியிட் டுமடுக்
கமலத்தையலர்த் திவிடத் தையிரப் பவனுக்

கருதிச் சருவிக் கயலைக் கயமுட்
படுவித் துழையைக் கவனத் தடைசிக்
கிளையைக் கடைவித் துவடுத் தனையுப் பினின்மேவி

அடலைச் செயல்சத் தியையக் கினியிற்
புருவித் துயமப் ப்ரபுவைத் துகைவித்
துரிசட் கமெடுத் துவிதிர்த் துமதித் தசகோர

மறாப் பணிரத் நமணிக் குழையைச்
சிறுகிட் டுமையிட் டொளிர்விட் டிமருட்
டிறமுற் றபொறிச் சியர்கட் கடையிற் படுவேனே

சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர்செப் பயிடப் பரிவானே

சனகற் குமகஸ்த் யபுலஸ்த் சயனற்
குமாற் குமனுக் ரகமெய்ப் பலகைச்
சதுபத் துநவப் புலவர்க் குவிமத் தியின்ஞான

படலத் துலகக் கணைலக் கியசொற்
றமிழிற் ப்ரிமுற் றிலகப் பொருளைப்
பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா

பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலைமுத் துதிர்செய்க் கழனிப்
பழனிப் பதிவெற் பினினிற குயியற் பெருமாளே.

40. தத்தத் தத்தத் தத்தத்தன
தத்தத் தத்தத் தத்தத்தன
தத்தத் தத்தத் தத்தத்தன — தனதான.

முத்துக்குச் சிட்டுக்குப்பிமு
டித்துச்சுக் கைப்பிற்சுற்றியு
முற்பக்கத் திற்பொற்புற்றிட நுதன்மீதே
மூக்யப்பச் சைப்பொட்டிட்டணி
ரத்நச்சுட் டிப்பொற்பட்டவை
மூற்சட்டைச் சித்ரக்கட்டழ கெழிலாடத்
தித்திக்கச் சொற்சொற்றுப்பிதழ்
கச்சுக்கட் கற்புச்சொக்கியர்
செப்புக்கொக் கக்கச்சுப்பெரு கனமேரு
திட்டத்தைப் பற்றிப்பற்பல
லக்கைக்குட் பட்டுத் தொட்டுயிர்
சிக்கிச்சொக் கிச்செட்டிப்படி யுழல்வேனோ
மெத்தத்துக் கைத்தைத் தித்திமி
ணிச்சித்தத் திற்பத்தத்தொடு
மெச்சிச்சொர்க் கத்திற்சிற்பர மருள்வாயே
வித்தைக்குக் கர்த்தத்தற்பர
முக்கட்சித் தற்குப்புத்திர
விச்சித்ரச் செச்சைக்கத்திகை புனைவோனே
நித்யற் பத்திற்பத்தர்க
ளொட்டிக்கிக் குக்குட்பட்டவர்
நிட்டைக்கற் புறப்பத்தர்க ளமரோரும்

செட்டிக்குப் புட்பத்தைக்கொடு
முற்றத்தற் றர்ச்சிக்கப்பழ
நிக்குப்பட் டத்துக்குத்துரை பெருமாளே.

---

௪௧. தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன—தனதான.

கடலைபொ ரியவரை பலகனி கழைநுகர்
கடினகு டவுதர விபரீத
கரடத டமுமத நளினசி றுநயன
கரிமு கவரது துணைவோனே
வடவரை யின்முகடு வதிரவொரு நொடியில்
வலம்வரு மரகத மயில்வீரா
மகபதி தருசுதை குறமினொ டிருவரு
மருவுச ரசவித மணவாளா
அடலசு ரர்கள்குல முழுதும டியவுப
ரமரர்சி றையைவிட் டெழில்மீற
மருணகி ரணவொளி யொளிருமயிலைவிடு
மாகர சரவண பவலோலா
படலவு டுபதியை யிதழிய ணிசடில
பசுபதி வரநதி யழகான
பழநிம லையருள்செய மதலைமொ ழிந்தலை
பழநிம லையில்வரு பெருமாளே.

---

42. தனதத் தனதன தனதன தந்தத்
தனதத் தனதன தனதன தந்தத்
தனதத் தனதன தனதன தந்தத்—தனதான.

புடவிக் கணிதுகி லெனவளர் அந்தக்
கடலெட் டையுமற குடிமுனி யென்கட்
புளிதச் சததள நிலைகொள் சயம்புச் சதுர்வேதன்

புரமெட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத் தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தாகர பரசிவ னிந்தத் தனிமூலம்

நிட்சித் தமுரிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்யுற்
றிரவுற் பனமொழி யுரைசெய் குழந்தைக் குருநாதா

வெதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடம்வைத் திடம்வளர் குலகுமு தம்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்

பொடிபட் டுதிரவும் விரிவுறு மண்டச்
சுவர்விட் டதிரவு முகடுகி ழிந்தப்
புரமப் பரவெளி கிடுகிடெ னுஞ்சப் புதமாக

பொருதிக் கையிலுள வயினிணமுண் கக்
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப்
பரவிக் கனமயி னடமிடும் விந்தைக் குமரேசா

படியிற் பொருமைக டகவுயர் செய்பொற்
கிரியைத் தனிவலம் வரவர னந்தப்
பலனைக் கரிமுகன் வசமருளும்பொற் பதினாலே

பாண்வெட் கிடவுள மிகவுமெவ குன்றக்
சவிரியைத் தாவிலை யெனவரு செந்திப்
பதிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே.

---

43. தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன—தனதான.

மலரணிகொண்டைச் சொருக்கிலேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கிலே கொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கிலேமுலை மதியாலே

மருவுநி தம்பத் தடத்திலேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்திலேவிழி வலையாலே

நிலவெறி யங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதியறி யந்தப் பிலுக்கி லேசெயு மொயிலாலே

நிதமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
கிழிமுமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்

அலையதி னைக்குற் பனத்தி லேயது
தினமிகு மென்சொப் பனத்தி லேவா
வறிவும ழிந்தற் பனத்தி லேமித மலைவேனோ
வசடனை வஞ்சச் சமர்த்த னாகிய
கசடனை யுன்சிற் கணைக்க ளாடியு
மலர்கொடு நின்பொற் பததனைதபே தொழ வருடாராய்
பலபல பைபொற் பதக்க மாரமு
மடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்பமாலையு மணிவோனே
பதியினின் மங்கைத் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழநியி லன்புற் றிருக்கும் வானவா பெருமாளே.

---

## திருச்செந்தில்.

44. தந்தந்தந் தந்தன தானன
தந்தந்தந் தந்தன தானன
தந்தந்தந் தந்தன தானன—தனதான.

வஞ்சங்கொண் டுந்திட ராவண
னும்பந்தென் திண்பரி தேரகரி
மஞ்சின்பண் புஞ்சரியாமென வெகுசேனை
வந்தம்பும் பொங்கிய தாகவெ
திர்ந்துந்தன் சம்பிரதாயமும்
வம்புந்தும் பும்பல பேசியு வெதிரேகை

மிஞ்சென் றஞ் சண்டைசெய் போதகு
ரங்குந் துஞ்சுங்கனல் போலவே
குண்டுங்குன் றுங்கலைவாரியு மதில்வீசி

மிண்டுந்தும் பங்களிறலைத
கந்துங்கங் கங்குர மார்பொடு
மிஞ்சக்குஞ் சிந்துரி சாசநர் வரைசேர

வுஞ்சண்டன் றென்றிசை நாடிவி
ளுந்தங்குஞ் சென்றெம தூதர்க
ளுந்துந்துந் தென்றிட வேதெசை நிணமூளை

யுண்டுங்கண் டுஞ்சில கூளிகள்
டிண்டிண்டென் றுங்குதி போடவு
யர்ந்தம்புங் கொணடுவெம் மாதவன் மருகோனே

தஞ்சந்தனு சஞ்சிறி யேன்மதி
கொஞ்சங்கொஞ் சந்துறை யேயருள்
தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே

சங்கங்கனு சங்கயல் சூழ்தட
மெங்கெங்குப் பொங்கமகாபுணி
தந்த்ங்குஞ் செந்திலில் வாழ்வுயர் பெருமானே

---

## பொது.

45\. தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன—தனதான.

நெடிய வடருவ டிடியவு மெழுகிரு
நெறநெ றெனநெரி யவுமுது பணமதி
நிபிடமுடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்

நிகரில் கலபியு மரவுமிழ் துவசமும்
நினதுகருணையு மறைதரு பெருமையும்
நிறமு மிளமையும் வளமையு மிருசர ணமுநீப

முடியு மபிநய வனசரர் கொடியிடை
தளர வளர்வன மிர்கமத பரிமள
குமுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்

மொகமொ கெனமது கரமுரல் குரவணி
முருக னருமுக னெனவரு வனபெயர்
முழுதுமியல்கொடு பழுதறமொழிவது மொருநாளே

கொடிய படுகொலை நிசிசர ருரமொடு
குமுத மெனமிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குடிகொள விதியோடக்

குமிறு கடல்குடல் கிழிபட வடுமற
மொளமொ ளெனவடி யொடலறி விழிவுயிர்
குருகுபெரியவெவ் வரைதொளைபட விடு சுடர்வேல

இடையில் முனைமலி குலிசமு மிலகிட
கவள தவளவி கடதட கனகட
விபரமுமிரணிய தரணியு முடையதோர் தனியானைக்
கிறைவ குருபர சரவண வெகுமிக
கனக புனிதையும் வனிதைய ருவரு
மெமதுமக வெனவுமை தருமிமையவர் பெருமாளே

திருத்தணிகை.

46. தனன தந்த தத்த தத்த தனன தந்த
தனன தந்த தத்த—தனதான.

எனையடைந்த குட்டம் வினைமி குந்த பித்த
மெரிவ ழங்கு வெப்பு வலிபேசா
திகலி நின்ற லைக்கு முபல கண்கு லைப்போ
டிரும லென்று ரைக்கு மிவைமேலா
மனைகள் பெண்டிர் மக்கள் தமை மறந்து சுற்ற
மதிம யங்கிவிட்டு மடியாதே
மருவி வந்தெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்
நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நினைவில் வந்து ளித்த கதிர்வேலா
நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்குசித்தர்
நெடிய குன்றி னிற்கு முருகோனே

திணைவிளங்க லுற்ற புனைவிளங்குறத்தி
செயலறிந்தணைத்த மணிமார்பா
திசைமுகனறிகைக்க வசுரறன்றடைத்த
சிறைதிறந்துவிட்ட பெருமாளே.

---

திருச்செந்தில்.

47. தந்தனா தந்தனத் தந்தனா தந்தனத்
தந்தனா தந்தனத் — தனதான.

பங்கமே வுபபிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறிப்
பஞ்சபா டகபடப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டப்பரப் பொதுமாதர்
தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கையால் கொண்டிளைத் தயராதே
தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ யன்புவைத் தருள்வாயே
அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதாபங்கெடுத்
தண்டதே வண்டமுட் படவேதா
னஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
சண்டமேலா கங்கொடுத் தருள்வோனே
திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா சங்கரற் குருநாதா
சிந்தையே தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

குமரகோட்டம்.

48. தனனதாத் தத்ததந்த தனனதாத் தத்ததந்த
தனனதாத் தத்ததந்த—தனதான.

அறிவிலாப் பித்தருன்ற
னடிதொழாக் கெட்டவஞ்சர்
அசடர்பேய்க் கத்தர்நன்றி யறியாத

அவலர்மேற் சொற்கள்கொண்டு
கவிகளாக் கிப்புகழ்ந்து
அவரைவாழ்த் தித்திரிந்து பொருள்தேடி

சிறிதுகூட் டிக்கொணர்ந்து
தெருவுலாத் தித்திரிந்து
தெரிவைமார்க் குச்சொரிந்து அவமேயான்

திரியுமாற் கத்துசிந்தை
யதனைமாற் றிப்பரிந்து
தெளியமோட் சத்தையென்று அருள்வாயே

இறையவர்மாற் றற்றசெம்பொன்
வடிவம்வேற் றுப்பிரிந்து
இடபமேற் கச்சிவந்த உமையாள்தன்

இருளைநீக் கித்தலஞ்செய்
தருளநோக் கிக்குழைந்த
இறைவர்கேட் கத்தகுஞ்சொ லுடையோனே

குறவர்கூட் டத்தில்வந்து
　　கிழவனைப் புக்குநின்று
　　குருவியோட் டித்திரிந்த　　　　தவமானைக்
குணமதாக் கிச்சிறந்த
　　வடிவுகாட் டிப்புணர்ந்த
　　குமரகோட் டத்தமர்ந்த　　　　பெருமாளே.

சோலைமலை.

49. தனனதந்த தத்தான தனனதந்த தத்தான
　　தனனதந்த தத்தான—தனதான

களவுகொண்டு கைக்காசி னளவறிந்து கர்ப்பூர
　　களபதுங்க வித்தார　　　　முலைமீதே
கலவியின்பம் விற்பார்க அவயவங்க ளைப்பாடுங்
　　கவிதெரிந்து கற்பார்கள்　　　　சிலதாமின்
றுளநெகிழ்ந்த வத்தான வுரைபிறழ்ந்து சத்தான
　　வுணையுணர்ந்து ரித்தாள　　　　மணநாறு
முபயபங்க யத்தாளி லபயமென் றுனைப்பாடு
　　முறைதெரிந்து கற்றோதி　　　　விழியாமோ
அளவில்வன்க விச்சேனை பரவிநின்ற சுக்ரீப
　　வரசுடன்க டற்றாவி　　　　யெழுவேயோ
யடலிலங்கை சுட்டாட நிசிசரன்ற சுக்ரீப
　　னறவொரம்பு தொட்டார்தம்　　　　மருகோனே

வளருமந்த ரச்சோலை மலையுகந்த முற்பாலை
வனவர்கொம்பி னைத்தேடி ருவேடயோ
வடிவுகொண்டு பித்தாகி யுருகிவெந்த முற்கானில்
மறவர் குன்றி னிற்போன பெருமாளே.

## பொது.

50. தத்த தனனதன தான தானதன
தத்த தனனதன தான தானதன
தத்த தனனதன தான தானதன—தனதான.

எத்தி யிருகுழையை மோதிமீளமதி
முட்டி யிடரியமு தூறு போலமுகி
லெட்டமகரமென வாளைவென்முனையை யெதிர்சி
யெத்தி சையிலும்வரு காமராசன்மிக
வொத்தியசுரர்களை யாள வீசியட
லெற்றுவிளைஞருயிர் கோலுநீலவிழி மடமாதர்
வித்தை தனிலுருகி யாசையாகியவர்
கைக்குண் மருவுபொரு ளாசைவாகியலர்
மெத்தைதனிலுருகி மோகமாகிவிழ வதன்மேலே
வெசச மிலைநடவு மேகுமேகுமினி
மற்ற வனையழையு மாதரேயெனமுன்
விட்ட படிறிதட நேசவோசைகெட வருள்வாயே
ஒத்தி விரிகமுகு வாளைதாவுபுன
லத்தி நகரமர சாளுவானிருளை
யொக்கு வினைவுமுனி லாமல பாருபல நிலைகூர

வுற்ற தருமனுடல் வீமன் வேல்விசயன்
நெற்றி நகுலசக தேவர்தேர்தனிலு
மொத்து முடிகிவிடு பாகனவாளமரி லசுரேசன்

பத்து முடிகடுக தாகவாகுவிரு
பத்து மொருகணையில் வீழநேரவுணர்
பட்டு மடியவமர் மோதுகாளமுகில் மருகோனே

பச்சை மயிலில்வரு வீரன்வேன்முருக
துட்ட நிருதர்குல காலவானவர்கள்
பத்தியுடனடியில் வீழவாழ்வுதவு பெருமாளே.

பொது.

51. தனத்தனன தனத்தனன
தனத்தனன தனத்தனன—தனதான.

குறிப்பறிய குழற்குமதி
நுதற்புருவ விலுக்குமிரு
குழைக்குவடு விழிகருமெழு குழலாலும்

கொடிப்பவள விதழ்க்குமிரு
சுடர்த்தரள நகைக்குமமு
தினுக்குமிக வுறத்தழுவு குறியாலும்

அப்புயபெரி தனத்துடனு
நடைக்குமினி னிடைக்குமல
ரடிக்குமிள நகைக்குமுள மயராதே

அகத்தியனொ டுரைத்தபொரு
ளளித்தருளி யரிப்பிரம
ரளப்பரிய பதக்கமல மருள்வாயே
கறுத்தடரு மரக்கரணி
கருக்குலைய நெருக்கியொரு
கணத்திலவர் பிணக்குடர்கள் கதிர்வேலாற்
கழித்தருளி யலக்கணுறு
சுரர்க்கவர்கள் பதிக்குரிமை
யளித்திடரை யறுத்தருளு மயில்வீரா
செறுத்துவரு கரித்திரள்கள்
திடுக்கிடமன் மருப்பையரி
சினத்தினொடு பறித்தமர்செய் பெருகானிற்
செலக்கருதி யறக்கொடிய
சிலைக்குறவர் கொடிக்கனது
சிறுத்தனமு முறத்தழுவு பெருமாளே.

---

## வேளூர்.

52. தனந்த தத்தன தானன தானன
தனந்த தத்தன தானன தானன
தனந்த தத்தன தானன தானன—தந்ததான.

நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்தரித்தகண் ணாலநேரென
நெடுஞ்சுரிக்குழல் சேர்முகில் நேரென நெஞ்சின்மேலே

## சோலைமலை.

54. தானதனத்தானதனத் தானதனத்தானதனத்
தானதனத்தானதனத்—தனதான.

சேலையடர்த் தாலமிதத்
தேகணையைச் சீறிருகத்
தூறுசிவப் பேறுவிழிக் கடையாலே

தேனிரதத் தேமுழுகிப்
பாகுநிகர்க் காரமுதத்
தேறலெனக் கூறுமொழிச் செயலாலே

ஆலிலையைப் போலும்வயிற்
றாலளகத் தாளதரத்
தாரிரதத் தாலுமலைப் பிடுவோர்மே

லாசையினைத் தூரவிடத்
தேபுகவிட் டேக்ருபைநற்
றாளிணையைச் சேரவெனக் கருள்வாயே

காலனைமெய்ப் பாதமெடுத்
தேயுதைபிட் டேமதனைக்
காயவெடுத் தேவிதியிற் றலையூடே

காசினியிற் காணவிரப்
போன்மதியைச் சூடியெருத்
தேறிவிரித் தாறுதிரைக் கடன்மீதில்

ஆலமிடற் றனோகரித்
தோலையுடுத் தீயமிதித்
தாடியிடத் தேயுமைவைத் தான்வாழ்வே
யாழியிலச் சூரனைவெற்
பேழையில்தொட் டாவிதுலைத்
தாதிதிருச் சோலைமலைப் பெருமாளே.

பொது.

55. தனதன்ன தத்ததந்த தனதன்ன தத்ததந்த
தனதன்ன தத்ததந்த—தனதான.

பழுதறவோ திக்கடந்து
பகர்வனதீ ரத்துறந்து
பலபலயோ கத்திருந்து மதராசன்
பரிமளபா ணத்தயர்ந்து
பனைமடலூர் தற்கிசைந்து
பரிதவியா மெத்தநொந்து மயல்கூர
அழுதழுதா சைப்படுக்க
ளாயிரவமா தர்க்கிரங்கி
யவர்பிரமா ணத்துகெஞ்ச மறைபோயின்
றழிவதுதான் முற்பயந்த
விதிவசமோ மற்றையுன்ற
னருள்வசமோ விப்ரமத்தே ரிதிலேனே

எழுசருவே தத்துமன்றி
முழுதினுமாய் நிற்குமெந்தை
யெனவொருஞா னக்குருந்த ருளமேவு
மிருவுருவா கித்துலங்கி
யொருகனதூ ணிற்பிறந்து
விரணியன்மார் பைப்பிளந்த தனியாண்மை
பொழுதிசையா விக்ரமன்றன்
மருகபுரா ரிக்குமைந்த
புளகபடீ ரக்குரும்பை யுடன்மேவும்
புயகிரிவா மச்சிலம்பின்
வனசரமா னுக்குகந்து
புனமிசையோ டிப்புகுந்த பெருமாளே.

---

## பெரும்பற்றப்புலியூர்.

56. தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன—தனதான.

விடுங்கைக் கோத்தக டாவுடை யானிகை
மடங்கிக்கைச்சிறை யானலனேகமும்
விழுங்கப்பட்டற வேயறமேலாதியர் விழியாலே
விரும்பத்தக்கன போகமுமோகமும்
விளம்பத்தக்கன ஞானமுமானமும்
வெறுஞ்சுத்தச்சவ மாய்வெளியாயுயிர் விடுநாளில்

இருங்கட்டைக்கிரை யாலடியேனுடல்
கிடந்திட்டுத்தம ரானவர்கோவென
இடங்கட்டிச்சுடு காடுபுகாமுன மனதாலே

பிறந்திட்டுப்பற வேமதியாயினு
பிறந்திட்டுப்பெற வேவிதியாயினு
பிரண்டிற்றக்கவ தாருதியமானவை பிசைவாயே

கொடுங்கைப்பட்டம ராமரமேழுடன்
நடுங்கச்சுக்ரிவ னுடைமராடிய
குரங்கைச்செற்றும கோததிதூளெழ நிருதேசன்

குலங்கட்பட்டநி சாசரர்கோவென
இலங்கைக்குட்டழ லோனெழமூடிய
குமண்டைக்குத்திர ராவணனார்முடி அடியோடே

பிடுங்கத்தொட்டச ராதிபனார்தி
ப்ரியங்கொட்டக்கன மாமருகாவியல்
ப்ரபஞ்சத்துக்கொரு பாவலனேயென விருதூதும்

ப்ரசண்டச்சொற்சிவ வேதசிகாமணி
ப்ரபந்தத்துக்கொரு நாதசதாசிவ
பெரும்பற்றப்புலியூர்தனில்மேவிய பெருமாளே.

## பொது.

57. தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தந்தன — தந்ததான.

கறுத்த நீர்விடு கூர்வேலெ லனுங்கடை
வடித்து நீடிய வாய்மீள வண்குழை
நடக்க வோடிய வாலாள நஞ்செனை வஞ்சநீடு

கயற்க ணார்கனி வாயூற லுண்டவர்
கழுத்து மாகமு யேகிக பங்கொடு
கலக்க மார்பொடு பாடீர குங்குமவு குன்றைமூட்

உறுத்த மார்புழுத் தார்தாவடங்களு
மழுத்து நாரியர் கூர்வாண கம்பட
வுடுத்த வாடையும் வேறாயு மூன்றுக மூன்றுவிழு

முருக்கு நாபியில் மூழ்காம ருங்கிடை
செருக்குமாதர் தம் வாரார்தனங்களை [சேர்வேலை
யொழித்தமோர்க்கரை காணாதநின்கருளை யென்று

நிறத்தநூபுர பாதாரவிந்தமு
முடித்த மாலையும் வாரார் தனங்களு
நிறத்திலேயடு வேலான கண்களும வண்டுபாடி

நெறித்த வோதியு நாயேன் மனம்பரி
தவிக்கயால்வர லாமோக லந்திட [வாய்
தினைக்கலாகென வேல்வேடர் கொம்புட னண்புகூர்

மறுத்துவாரிதி கோகோவெ னும்படி
வெறுத்தி ராவணன் வாணாளை யம்பினில்
வதைத்த மாமனு மேவார்பு ரங்களு மண்டமேவ
வளர்த்த தாதையு மாறான குன்றமு
மனைத்து லோகமும் வேதக மங்களு
மதித்த சேவக வானாளு மும்பர்கள் தம்பிரானே.



58. தனதத்தன தத்தன தத்தன
தனதத்தன தத்தன தத்தன
தனதத்தன தத்தன தத்தன—தனதான.

புருவத்தைநெ றித்துவிழிக்கயல்
பயிலிட்டுவெ ருட்டிமதிக்கிரு
புதுவட்டைமி னுக்கியளிக்குல மிசைபாடும்

புயல்சற்றுவி ரித்துநிறைத்தொளி
விளையிட்டக ரத்தையசைத்தில
புனைமெத்தைப டுத்தபளிக்கரை தனிலேற

சரசத்தைவி ளைத்துமுலைக்கிரி
புளகிக்கவ ணைத்துநகக்குறி
தனைவைத்துமுகத்தைமுகத்துட னொன்றிமேவித்

தணிவித்திர தத்ததரத்துமி
ழமுகதத்தைய ழித்துயிருக்கில்
டருபித்தைய கற்றியுனைத்தொழ முயல்வேனோ

பரதத்தைய டக்கிநடப்பவர்
த்ரிபுரத்தை யெறிக்கநகைப்பவர்
பரவைக்குள்வி டத்தைமிடற்றிடு — பவிநீதி

கரகப்பரை யுற்றுமிகப்பகி
ரதியுற்றசி ரத்தை நிரத்துய
ரரவத்தையொ ருப்படுகுப்பப்பவ — ருமையாளர்

சுரர்சுத்தர் மனத்துறைவித்தகர்
பணிபத்தர் பவத்தையறுப்பவர்
கடலைப்பொடி யைப்பரிசிப்பவர் — விடையேறுந்

துணையொத்தப தத்தவரெற்றிடு
மதனைக்கடி முத்தர்கருத்தமர்
துலைவற்றக்ரு பைக்குருதித்தருள் — பெருமாளே.

திருப்பழநிமலை.

59. தனதன தனதன தனதன தனதன
தந்ததானன தனதன — தனதான.

குவளையொருதிரு குழையைமுடுகிய
கோல்வேல்விழி — மடவார்தங்

கொடியம்ருகமத புளகதனகிரி
கூடிநாடொறு — மயலாகி

துவளவுருவய சரசவிதமதில்
சோரவாரிதி — யலையூதே

கழுவுமென் துயி ரழியுமுனமுயர்
தோகைமீதினில் வரவேணும்
கவளகரதல கடகவிகட
போலபீதர முகமாள
கடவுள் கணபதி பிறகுவருமொரு
காரணாகதிர் வடிவேலர்
பவளமரகத கனகவயிரக
பாடகோபுரம் ரவிதேரும்
பரிபுமிடறிய பழநிமலைவரு
பாவலோர்புகழ் பெருமாளே.

---

சிதம்பரம்.

60. தனதந்த தத்ததந்த தனதந்த தத்ததந்த
தனதந்த தத்ததந்த—தனதான.

மதவெங்க ரிக்கிரண்டு
வலுகொம் பெனத்திரண்டு
வளருந்த னத்தணிந்த மணியாரம்
வளைசெங்கை யிற்சிறந்த
வொளிகண்டு நித்திலங்கு
வாருந் திகைத்திரங்க வருமனா

விதவிங்கிதப் ரியங்கள்
  நகைகொஞ்சு தற்குணங்கள்
  மிகைகண் டுறக்கலங்கி மருளாதே
விடுசங்கை யற்றுணர்ந்து
  வலம்வந் தனைப்புகழ்ந்து
  மிகவிஞ்சு பொற்பதங்கள் தருவாயே
கதியுந்தி ருக்சரந்தை
  மதியுஞ்ச டைக்கணிந்து
  நடநம்ம ருற்றிருந்த கயிலாய
கவகங்கை யிற்பிடுங்கு
  மசுரன்சி ரத்தொடங்கம்
  நவதுங்க ரத்தமுந்து திரடோளுஞ்
சிதையும்ப டிக்கொரம்பு
  தனைமுன்தொ டுத்தகொண்டல்
  திறல்செங்க ணச்சுதன்றன் மருகோனே
தினமுங்க ருத்துணர்ந்து
  சுரர்வந் துறப்பணிந்த
  திருவம்ப லத்தமர்ந்த பெருமானே.

61. தானன தந்தனந் தானன தந்தனந்
  தானன தந்தனந்—தனதான.

காதன்மோ கந்தரும் கோதைமார் கொங்கைசிங்
  காரகா தஞ்செழுங் கனிவாய்கண்
காளகூ டங்கொடுக் காலரூ பம்பொருங்
  காமபா ணஞ்சரும் பிணவாழும்

ஓதிகார் செஞ்சொல்மென் பாகுதே னென்றயர்ந்
    தோரமோ கந்தவென் றுரையாதே
பூசலா டும்புலன் றூரியேசென் றுநீன்
    றேயுமா றென்னையுங் கருதாதே
தாதகி சண்பகம் பூகமார் சந்தமந்
    தாரவா சந்திசந் தனநீடுஞ்
சாமவே தண்டவெங் கோபகோபகோ தண்டசந்
    தானமா தெங்கள்பைம் புனமேவும்
தீதிலா வஞ்சியின் பாதமேகொண்டிடுஞ்
    சேகரா தெண்டகுந் தையின்வாழ்வே
தேவிபா கம்பொரும் தாதிநா தன்றெழுந்
    தேசிகா வம்பர்தம் பெருமாளே.

62. தானதாத்த தனதன தானதாத்த தனதன
    தானதாத்த தனதன—தனதான.

ஆலவேற்ற விழியினர் காலைநீட்டி யழுதழு
    தாகமாயத் துமுறைமுறை பறைமோத
வாடல்பார்க்க நிலையெழு பாடைகூட்டி யிரையம
    யானமேற்றி யுதவினோ ரயலாகக்
காலமாச்சு வருகென வோலைகாட்டி யமபடர்
    காவலாக்கி யுயிரது கொடுபோகக்
காமயாக்கை பொடிபடு நாளில்வாய்த்த கழலிணை
    கா[illegible]ாற்க ருதருபுணர் தருவாயே
வேலைகிர்த்தி விதரண சீலபார்த்தி பகனக
    வியாழ சோதரபருவி முருகோனே

வேதனூட்டில் விளைவுள வேனல்காத்த சிறுமியை
    வேடனூட்டில் விழிபடு          மிளையோனே
ஞாலமேத்தவழிபடு மாறுபேர்க்குமகமென
    நாணல்பூத்த படுகையில்          வருவோனே
நாதபோற்றியெனமுது காதைகேட்பவனுபவ
    ஞானவார்த்தையருளிய          பெருமாளே.

---

சோணசலம்.

63. தனதன தானதன தனதன தானதன
    தனதன தானதன—தனதான.

விடுமதவேள்வாளியின் விசைபெறுமாலாசல
    விழிகொடுவா போவென          வுரையாடும்
விரகுடனாறுயிர மனமுடைமாபாவிகள்
    ம்ருகமத கோலாகல          முலைதோய
அடையவும் மாசாபர வயமுறுகோமாளியை
    அவனியுமாகாசமும்          வசைபேசும்
அசடஅநாசாரனை அவலனை ஆபாசனை
    அடியவரோடாள்வது          மொருநாளே
வடகுலகோபாலர்த மொருபதினாயிரம்
    வனிதையர்தோள்தோய்தரு          மபிராம
மரகதநாருயணன் மருமுகசோணாசல
    மகிபசதாகாலமு          மிளையோனே

உடுபதிசாயாபதி சுரபதிமாயாதற
    உலகுயவாரார்கலி வறிதாக
உயரியபாதாளமு திருதருநீருய் விழ
    ஒருதனிவேலேவிய பெருமாளே.

---

64. தனனத்தன தானன தனனத்தன தானன
    தனனத்தன தானன — தனதான.

இடருக்கிடராகிய கொடுமைக்கணைமேல்வரு
    மிருதிச்சிறுகால்வரு மதனாலே
இயலைத்தருகானக முயலைத்தருமேனியி
    லெரியத்தவமாமதி நிலவாலே
தொடரக்கொடுவாதையி லடையைக்கரைமேலலை
    தொலையத்தனிவீசிய கடலாலே
துணையற்றணிபூமலரணை யிற்றனியேனுயிர்
    துவளத்தருமோதுயர் தொலையாதோ
வடபொற்குலமேருவின் முடுகிப்பொருசூரனை
    மடியச்சடமேவிய வடிவேலா
மறவக்குலமாதொரு குறமெய்த்திருமாமகள்
    மகிழப்புனமேவிய மயில்வீரா
அடர்பட்டுறுகேதகி மடலிற்றழைசேர்வய
    லருணைத்திருவீதியி னுறைவோனே
அவனித்திருமாதொடு சுவனுக்கிமையாவிழி
    அமரர்க்கரசாகிய பெருமாளே.

## சுவாமிமலை.

65 தானதனதன தானதனதன
தானதனதன—தனதான.

பாதிமதிநதி போதுமணிசடை
நாதனருளிய குமரேசா
பாகுகனிமொழி மாதுக்குறமகள்
பாதம்வருடிய மணவாளா
காதுமொருவிழி காகமுறவருள்
மாயனதுதிரு மருகோனே
காலனெனையணு காமலுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதியயனொடு தேவர்சுருலக
மாளும் வகையுறு சிறைமீளா
ஆடுமயிலினி லேறியமரர்கள்
சூழவலம்வரு மிளையோனே
சூதமிகவளர் சோலைமருவுசு
வாமி மலைதனி லுறைவோனே
சூரனுடலற வாரிசுவறிட
வேலைவிடவல பெருமாளே.

## திருத்தணிகை.

66 தனதந் தனதத் தனதந் தனதத்
தனதந் தனதத்—தனதான.

குயிலொன் றுமொழிக் குயினின் றலையக்
கொலையின்ப மலர்க் கணையாலே

குளிருந்தவளக்குலசந்த்ரவொளிக்
  கொடிகொங்கையின்மூத்  தனலாலே
புயல்வந்தெறியக் கனனின்றலறப்
  பொருமங்கையருக்  கலராலே
புயமொன்றமிகத் தளர்கின்றதனிப்
  புயல்வநதணையக்  கிடையாதோ
சயிலங்குலையத் தடமுந்தசுரச்
  சமனின்றலையப்  பொரும்வீரா
தருவேங்கைவனக் குறமங்கையர்மெய்த்
  தனமொன்றுபணித்  திருமார்பா
பயிலுங்ககனப் பிறைதண்பொழிலிற்
  பணியுந்தணிகைப்  பதிவாழ்வே
பரமன்பணியப் பொருளன்றருளப்
  பகர்செங்கழனிப்  பெருமாளே.

பொது.

67. தந்த தானன தந்த தானன
  தந்த தானன — தனதான.

கண்டுபோல்மொழி வண்டுசேர்குழல்
  கண்கள்சேல்மதி  முகம்வேய்தான்
கண்டுபாவனை கொண்டதோள்களி
  லொன்று காதலி  ருகோடு
மண்டுமார்பினில் விண்டதாமென
  வுந்துகூர்முலை  படவார்தம்

வஞ்சமாமதில் நெஞ்சுபோய்மடி
    கின்றமாயம தொழியாதோ
கொண்டலார்குழல் கொண்டைபோல்விழி
    கொண்டுகோகில மொழிகூறுங்
கொங்கையாள்குற மங்கைவாழ்தந
    குன்றின்மார்பொடு குளிராகம்
விண்டுமாமன மண்டுசூர்கடல்
    வெம்பமேதினி தனின்மீளா
வென்றியானையு மின்றிவேளையும்
    வென்றுமேவிய பெருமாளே.

குருகிரி.

68. தனதன தத்தத் தத்தன தத்தத்
தனதன தத்தத் தத்தன தத்தத்
தனதன தத்தத் தத்தன தந்தத்—தனதான.

தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடைபட்டுத் தத்தடி யிட்டுத் தடுமாறி
தடிகொடு தத்திக் கக்கல் பெருத்திட்
டசனமும் விக்கிச் சத்தியெ டுத்துச
சளியுமிகுத்துப் பித்தமுமூற்றிப் பலகாலும்
சிலதயி லத்திக் கொட்கரிவ ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலியிட்டுத் [முன்
தெளியவடித்துற் றுய்த்துடன் செத்திட் டுயிர்போ

திகழ்புகழ் கற்றுச் சொற்கள் பயிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பர முத்திக் கருள்தாராய்

கலைவி சித்துப் பக்கறை யிட்டுப்
பரிசெ லுத்திக் கற்கொடு வெற்பைக்
கடகடத் திக்கட் டெனஎட் டிப் பொருசூரன்

களபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட ஏற்றிக்
களிமயி லைச்சித் ரத்திநடத் திப் பெருகோவே

குலிசன்மகட்குத் தப்பியுமற்றக்
குறவா மகட்குச் சித்தமும் வைத்துக்
குளிர்தினை மெத்தத் தத்துபுனத்திற் றிரிவோனே

கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரமலி லைத்துத் தற்பர முற்றுக்
குலகிரியிற்புக் குற்றுறையுக்ரப் பெருமாளே.

69. தனன தன தனன தன தனன தன தனன தன
தனன தன தனன தன — தனதான.

அளகநிறை குலையவிழி குவியவளை கலகலென
வமுதமொழி பதறியெழ வெளியாக

மழைமுழுகு புளகமுலை குழையவிடை துவளமிக
வழுதநிலை யருள்பரவ வதிமோகம்

உளமுருக வருகலவி தருமகளிற் கலவிதனி
யுழலுமது கவடுமதி யொழியாதோ
யுலகடையமயிலின்மிசை நொடியளவும் வருமளவி
லுனதுமது மலரடியை யருள்வாயே
வளையுமலை கடற்சுவற விடுபகழி வரதனருள்
மருதினொடு பொருதருளு மபிராம
வரியரவின் மிசைதுயிலும் வரதசயமகள்கொடுமை
மறுகியமர் முடுகிவிடு நிருதேசன்
தளமுறிய வரைதகர வசுரருடல் தலைசிதற
தகனமெழ முடுகிவிடு வடிவேலா
தரளமணி வடமிளகு குறவர்திரு மகள்கணவ
சகலகலை யெழுதவல பெருமாளே.

---

## திருவாரூர்.

70 தன்ன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன—தனதான.

சரமுமுளரியின் மலர்முக மதிகுழல்
கனமிகுதனுமொரு கனிகதி ரிளநகை
கலகமிடுவிழி கடலென விடமென மனதோடே

கருதி யனைநடை கொடியிடை யியல்மயில்
கமழு மகிழுட னிளகிய ம்ருகமத
களப புளகித கிரியினுமயல்கொடு    திரிவேனை
இரவு பகலற பவமற வினையற
வியனுமயல்தர விழியினில் விழியர
விசையமுழுகிய வொருகள பதமுற    மடலூடே
வெழுத வரியவள் குறமக ளிருதன
கிரியில விழுதினை யினியவ னெனுமுறை
யினிமைபெறுவது மிருபதமடைவது    மொருநாளே
சுரபி மகனை வெழுபொருள் வினவிட
மனுவிநெறி மணி யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவுபி    னதிதீது
அணவி லிதுபிழை பெரிதென வருமனு
வுருகி யரகர சிவசிவவெனுமதோர்
சுரபி யலம்வர விழிபுனல் பெருகிட    கடுவாசப்
பரவி யதனது துயர்கொடு நடவிய
பழநின் மதலையை யுடலிரு பிளவொடு
படிய விரதமு னடவிட மொழிபவ    னருளாரூர்
பதியில முருக சிவசுத கணபதி
குமர குருபர திருபதி சரவண
பரவைமுறிபட மயில்கொடு நடவிய    பெருமானே.

## பழநிமலை.

**71.** தனத்தனனத் தனததனனத்
தனத்தனனத் தனத்தனனத
தனத்தனனத் தனததனனத் — தனதான.

குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே
குதட்டியிதழ்க் கடித்துதவிக்
கயற்கடையிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வை கொடுத்துநகக் குறியாலே
பொறித்ததனத் தனைத்தமனச்
செருக்கினாகைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனைப் பிணிப்படுவித் திடுமாதர்
புலைத்தலையிற் செலுத்துமனப்
ப்ரமத்தையறப் ப்பிரசித்தமுறப்
பிரித்தருளித் திருக்கழலைத் தருவாயே
பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
புழுககளுகக கழுக்கள்புகத் திருநீறு
பரப்பியதத் திருப்பதியுக்
கனற்புனலிற கனத்தசொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் கவிராசர்

செறித்தசடைச் சதித்தரியத்
தகப்பன்மதித் துகப்பவினச்
சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே

திகழ்ப்படுசெப் பதிக்குளெனைத்
தடுத்தடிமைப் படுத்தஅருட்
டிருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே.

---

## திருப்பிரமபுரம்.

72. தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன — தனதான.

தருவினெகிழ்ந்து மருண்டுவெருண்டு
சமயமுமென்றுலை யென்றுவரும்படி
தலைவருநின்றுக லங்கிவிரும்புய தமிழ்கூறுஞ்

சலிகைநன்றியும் வென்றியுமங்குள
பெருமைகளுங்கன முங்குணமும்பயில்
சரவணமும்பொறை யும்புகழுந்திகழ் தனிவேலும்

விருதுநூலங்குதி கண்டியுமண்டரு
முருகிவணங்கிவ ரும்பதமும்பல
விதரணமுந்திற முந்தரமுந்தினை புனமானும்

ம்ருகமதகுங்கும கொங்கையுநொந்தடி
வருடிமணநப்பு ணர்ந்துதவம்பல
விசயமுமன்பிலொழிந்துமொழிந்தியல் புதல்வோரோ

கருதியிலங்கைய ழிந்துவிடும்படி
யவுணரடங்கம றிந்துவிழும்படி
கதிரவணிந்துவி ளங்கிவரும்படி    விடுமாயன்

கடகரியஞ்சின டுங்கிமுறிந்திட
மடுவினில்வந்துத வும்புயமந்தரன்
கருணைமுகுந்தன ரங்கள் வருஞ்சக    டறமோதி

மருதுகுலுங்கம லங்கமுனிந்திடு
வரதனலங்கல்பு னைந்தருளுங்குறள்
வடிவனெடுங்கடல் மங்கவொரம்புகை    தொடுமீளி

மருகபுரந்தர னுக்குவமொன்றிய
பிரமபுரந்தனி லுற்குகனென்பவா
மணமதிரும்பரி வொன்றியமர்ந்தருள்    பெருமாளே.



73. தனதன தனதன தந்ததானன
தனதன தனதன தந்ததானன
தனதன தனதன தந்ததானன — தனதான.

கனைகடல்வயி றுகுழம்பிவாய்விட
வடதமனியகிரி கம்பமாய்நட
கணபணவிபரித தொந்தகாளபு    டந்நராஜன்

கயிறென அமரா னந்தகோடியு
முறைமுறையமுதாக டைந்தநாளொரு
கழியறவுலகைகவி ழுங்குமேக ஒழுங்குபோல

விடமதகரிசரு மெண்டிசாமுக
கிரிகளுமுறுகிட அண்டகோளகை
வெடிபடஎவரையும் விஞ்சிமேலிடு நஞ்சுபோல

விடுகுழையளவும ளாந்துகாமுக
ருயிர்பலிகவர்வுறு பஞ்சபாதக
விழிவலைமகளிரொ டன்புவகூர்தொ ழிந்திடாயே

முனைபெறவலயம் அணைந்தயோகர
நிசிசரர்கடகமு றிந்துதூளெழ
முகிலெனவுருவமி ருண்டதாரக னஞ்சமீன

முழுகியதிமிரத ரங்கசாகர
முறையிடஇமையவர் தங்களூர்புக
முதுகிரியுருவமு னிந்தசேவக செம்பொன்மேரு

அணையனகனவித சண்டகோபுர
அருணையினுறையும ருந்துணைமுலை
அபிநயவனிதைதருங்குமாரநெ ருங்குமால்கொண்

டடவியில்வடிவுக ரந்துபோயொரு
குறமகள் பிறகுதிரிந்தகாமுக
அரியரபிரமபு ரந்தராதியர் தம்பிரானே.

## பொது.

### 74. தையதன தானத்—தனதான.

துள்ளுமதவேள்கைக் கணையாலே
தொல்லைநெடுநீலக் கடலாலே
மெள்ளவருசோலைக் குயிலாலே
மெய்யுருகுமானைத் தழுவாயே
தெள்ளுதமிழ்பாடத் தெளிவோனே
செய்யகுமரேசத் திறலோனே
வள்ளல்தொழுஞானக் கழலோனே
வள்ளிமணவாளப் பெருமாளே.



## நிம்பபுரம்.

### 75. தந்ததனதன தந்ததனதான
### தந்ததனதான—தனதான.

அஞ்சலிதபூத முங்கரணநாலு
மந்திபகல்வாது மறியாத
வந்துநடுவாதி யொன்றுமிலதான
வந்தவொருவீடு பெறுமாறு

மஞ்சுதவழ்சார லஞ்சயிலவேடர்
மங்கைதனைநாடி வனமீது
வந்தசரணார விந்தமதுபாட
வண்டமிழ்விநோத மருள்வாயே
குஞ்சரகலாப வஞ்சியபிராமி
குங்குமபடீர வதிரேக
கும்பதடமீது சென்றணையுமாறு
குன்றுதடுமாற விகல்கோப
வெஞ்சமரசூர னெஞ்சுபகைதீர
வென்றிவடிவேலை விடுவோனே
விம்பமதில்சூழ நிம்பபுரவாண
விண்டலமகீபர் பெருமாளே



76. தனன தனத்தத் தனந்தனந்தன
தனன தனத்தத் தனந்தனந்தன
தனன தனத்தத் தனந்தனந்தன—தனதான.

முகமுமினுக்கிப் பெருங்கருங்குழல்
முகிலையவிழ்த்துச் செருந்திசண்பக
முடியைநிறைத்துப்புறம்பவந்தடி முன்பினாக

முலையையசைத்துத் திரிந்துமுன்றரி
கலையைநெகிழ்த்துப் புனைந்துவஞ்சக
முறுவலளைத்துத் துணிந்துதந்தொரு முன்றிலூடே

மகளிர்விருப்பிற் சிறந்தபந்தியின்
மதனனுநிற்கக் கொழுந்துவெண்பிறை
மடலவலையரிக்கத் திரண்டுபண்டுபதனை வண்பாட

மலையநிலைத்துக் கறந்ததென்றலு
நிலைகுலையத்தொட் டுடம்புபுண்செய்து
மயலையளிக்கக் குழைந்துசிந்தைம யங்கலாமோ

பலநவன்மக்கட் புகுந்துகந்தர
பகனமுகட்டைப் பிளந்துமந்தர
பருவரையெரக்கச் சுழன்றுபின்புய றந்துபோக

பணபணியஞ்சத் துரங்கமுன்றனை
படிகிடத்துக் கழிந்துவிந்தெழு
பரவையரற்றப் பரபஞ்சநின்றுப யந்துபாடக்

கனனமுக்கட் சயபபுவுமப்ரிய
மிசவசுரர்க்குக் குரம்பைவகநிட
விகடமாகுததிப் பொருங்கொடும்படைவென்றவேளே

குழைபணியொப்பற் றிருந்தசங்கறி
கவுரியெடுத்துப் பரிந்துகொங்கையி
லமுதமளிக்கத் தெளிந்துகொண்டருள் தம்பிரானே

## திருவருணை.

77. தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் — தனதான.

கயல்விழித் தேனெனைச் செயலழித் தாயெனக்
கணவகெட் டேனெனப் பெறுமாது

கருதுபுத் ராஎனப் புதல்வரப் பாஎனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே

பயில்குலத் தாரழப் பழமைகட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனாரும்

பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்

அயலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே

அமரரத் தாசிறுக் குமரிமுத் தாசிவத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே

புயலிளைப் பாறுபொற் சயிலமொச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே

பொடிப்படப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருதழச் சேவகப் பெருமாளே.

பொது.

80. தானந்தன தன தானந்தன தன
தானந்தன தன—தன தான.

தீயும்புவனமும் நீருந்தரணியும்
வானுஞ்செறிதரு பசுபாசந்
தேகந்தனிலேயெனென்றிருவினை
தீருந்திறலினை யறியாதே
ஓயும்படியறு நூறும்பதுமுதல்
நூறும்பதினிரு பதினாறு
மோடுஞ்சிறுவயிர் மீளும்படிநல
யோகம்புரிவது கிடையாதே
வேயுங்கணியும் விளாவும்படிபுன
மேவுஞ்சிறுமிதன் மணவாளா
மீனம்படுகடலேழுந்தழலெழ
வேதங்கதறிட வொருநாளும்
வாயுங்குலகிரி மாவுந்தொளைபட
மாகந்தரமதில் மறைசூரன்
மார்புந்துணையுறு தோளுந்துணிபட
வாள்கொண்டமர்செய்த பெருமாளே.

81. தனனதாத்தன தனனதாத்தன
தனனதாத்தன—தந்ததான.

பொதுவாய்த்தனி முதலதாப்பக
லிரவதாய்ப்புகல் கின்றவேதப்
பொருளதாய்ப்பொருண் முடிவதாய்ப்பெரு
வெளியதாய்ப்புதை கின்றஞான
கதியதாய்க்கரு தரியதாய்ப்பரு
கமுதமாய்ப்புல னைந்துமாயக்
கரணமாய்த்தெனை மரணமாற்றிய
கருணைவார்த்தையை யென்றுசேர்வேன்
உததிதீப்பட நிருதரார்ப்பெழ
வுலகுபோற்றிட வெங்கலாப
வொருபராக்ரம துரகமோட்டிய
வுரகர்போற்றிய கண்பவானோர்
முதல்வபார்ப்பதி புதல்வகார்த்திகை
முலைகள்தேக்கிட வுண்டவாழ்வே
முளரிபாற்கடல் சயிலமேற்பயில்
மூதியமூர்த்திகள் தம்பிரானே.

82. தனத்தத் தந்தனந் தனத்தத் தந்தனந்
தனத்தத் தந்தன—தனதான.

தடக்கைப்பங்கயங் கொடைக்குக்கொண்டதண்
டமிழ்க்குத்தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச்சென்றிரந் துளத்திற்புண்படுந்
தளரச்சிப்பமபரந் தனையூசற்
கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப்பஞ்சயிந் த்ரியவாழ்வைக்
கணத்திற்சென்றிடந் திருத்தித்தண்டையங்
கழற்குத்தொண்டுகொண் டருள்வாயே
படைக்கப் பங்கயன் றுடைக்கச் சங்கரன்
புரக்கக்கஞ்சமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக்கொண்டிடுந் தனிவேலா
குடக்குத்தென்பரம் பொருப்பிற்றங்குநங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக்கும்பிடும் பெருமாளே.

திருவருணை.

83. தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த—தனதான.

முழுகிவட வாமுகத்தி லெழுகனலி லேபிறக்கு
முழுமதிநி லாவினிற்கும் வசையாலும்

மொழியுமட மாதருக்கு மினியதனி வேயிசைக்கு
முதியமதராஜனுக்கு மழியாதே
புழுகுதிகழ் நீபமத்தி லழகியகுரா நிறைத்த
புதுமையினி லாதிரட்டி புயமீதே
புனைரும்வகை தானினைத்த துணரும்வகை நீலசித்ர
பொருமயிலி லேறிநித்தம் வரவேணும்
எழுமகர வாரிசுற்று பொழிலருணை மாநகர்க்கு
ளெழுதரிய கோபுரத்தி லுறைவோனே
இடைதுவள வேடுவச்சி பவளவித ழேதுடிப்ப
விளமுலைவி டாதசித்ர மணிமார்பா
செழுமதியகாகமொய்த்தஒழுகுபுனல்வேணிவைத்த
சிவனுமுத லோதுவித்த குருநாதா
திசைமுகன்முராரிமற்று மரியபலதேவருற்ற
சிறையடைய மீளவிட்ட பெருமாளே.



விராலிமலை.

84 தானதத் தனதான தானதத் தனதான
தானதத் தனதான — தனதான.

நீள்புயற் குழன்மாதர் பேரினிற் க்ருபையாகி
நேசமுற் றடியேனு நெறிகேடாய்

நேமியிற் பொருடேடி யோடியெய்த் துளம்வாடி
நீதியிற் சிலவாழ்வை நினையாதே
பாழினுக் கிரையாம னமம்வைத் தொருகேடி
பாடலுற் றிடவேசெய் திடுமோசம்
பாவியைப் படிவாழ்க தெவர்கட்குள தான
பார்வைசற் றருள்வேறு பணியாயோ
ஆழியிற் றுயில்வோனு மாமலர்ப் பிரமாவு
மாகமப் பொருளோரு மனைவோரு
மானமத் தகவோரு ஞானமுற் றியல்வோரு
மாயிரத் திருநூறு மறையோரும்
வாழுமெய்த் தவர்சூழ்வி ராலிவெற் பினின்மேறி
வாகுசித் திரதோகை மயிலேவு
மாறெனப் பொருசூர னீரெழப் பொரும்வேல
மான்மகட் குளனான பெருமாளே.

---

திருவேரகம்.

85. தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த—தனதான.

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்க முறுவேனோ

யறுதிபெற நடையுடைய சிறிதுபட மொழிபழகி
யாவியாயமேவார் தேவிமாருமாய்
விழிசிதற வரிவையர்கள் பரிகுழியை நிலைமையென
விடுவாசலாய் மாடகூடமா

யனுவளவு தவிடுமிகள் பிதிரவிட மனமிருகி
பாசையாளரா யூசிவாசியா யவிகிற சுடர்போலே
வெறுமிடிய னொருதவசிய முதுபடை யெனுமளவில்
மேலைவீடுகேள் கீழைவீடுகேள்

திகிதிடென நுழைவதன்மு னெதிர்முடுகி யவர்களொ
டீறிநாளிபோ லேறிவீழ்வதால் [டு
விரவினொடு வருபொருள்கள் சுவரியிட வணுகிவெறு
வீணியார்சொலை மேலதாயிடா----
விதிதனை நினையாதே

பிணுருமிணு கெனுமுடல மறமுருகியிறுகிவர
வீணர்சேவையா யூணுபாவியாய்
மறுமையுளதெனுமவரை விடும்விழலைய தனில்வரு
வார்கள்போலவே காணும்மாவென
விடுதுறவுபெரியவரை மறையவரைவெடுவெடென
வேளமேகொலீ ஞானிவாயராய்----
பிடையுறு வறுநாளில்

வறுமைசெனு முடுகிவர வுறுபொருளு நழுவிவிவ
வாகமுழுதகா பாலைசோகைநோய்

பெறுவயிறு வயிறுமலி படுவன்விர லிருவிழிகள்
பீளைசாரிடா வீளைமேலிடா
வழவழென வுமிழுவதுகொழகொழெனவொழுகிவிழ
வாடியூனெலா நாடிபேதமாய்—
மனையவள் மனம்வேறாய்
மனுகுமனு கெனுமனயி லனுதினமுமனையுமொரு
மாதார்சீயெனு வாலர்சீயெனு
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடுவாவெனு வீடுபோவெனு
வலதழிய விரகழிய வுரைகுழறி விளிசொருகி
வாயுமேலிடா வாவிபோகுநாள்—
வனிதர்கள் பலபேச
இறுதியிதொடறுதியென வுறவின்முறை கதறியழ
வேழைமாதரார் மோதிமேல்விழா
வெனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
வீழுலோவெனு வாயையாவெனு
விடுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
வீமதேசமே பேய்கள் சூழ்தரா—
வெரிதணி விடும்வாழ்வே
பிணையடிகள் பரவுமுன தடியவர்கள் மிகவுமனை
யேசிடார்களோ பாசநாசனே
பிருவினையு மலமுமற விரவியொடு பிறவியற
வேகபோகமாய் நீயுநாளுமா

யிறுகும்வகை பரமசுக மதனையருளிடமருதி
யேகநாயகா லோகநாயகா—
விமையவர் பெருமாளே.

## திருகரபுரம்.

99. தனதனத் தனதனத் தனதனந் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனந் தனதனத்-தனதான.

ஒருவரைத் தனிமனைச் சயனமெத் தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிச் சுழலவிட்
டொருவரைப் பரபரப் பொடிதெருத் திரியவிட்
டினிதாக

ஒருவரைத் தமதனைக் கருகுறப் புணரருட்
டொருவரைப் பரவசப் படவுடற் றழுவலுற்
றுயிர்பிழைப் பதுகழுத் தளவழுப் பசமெனச்
செயுமாதர்

தருமயற் ப்ரமைதனிற் றவநெறிக் கயலெனச்
சரியையிக் கிரியையிற் றவஞபற் பெனதுகைக்
தனமவத் தினிபிறைத் தெவருமுற் றிகழ்வுரக்
திரிவேனைச்

சகலதுர்க் குணமறைச் சகலசற் குணமுறத்
தரணியிற் புகழ்பெறக் கருணையுற் றுனதுபொற்
சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திடவருட்
டருளாயே

குருமொழித் தவமுடைப் புலவரைச் சிறையில்வைத்
தறுமுக் கிரம்முனைத் திடமொக் கரைமுழுக்
கொடியதுர்க் குணவவுத் தரைமுதற் றரிசறுத்
திடும்வேலா

குயில்மொழிக் கயல்விழித் துவரிதழ்ச்சிலைநுதற்
சசிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்
கொடியிடைப் பிடிநகைக் குறமகட் டிருவிணைப்
புணர்வோனே

கருதுகட் சமயர்கட் கணியறக் கவையுடைப்
பறிதலைச் சமணரைக் குலமுதற் பொடிபடக்
கலகமிட் டெனுயிர்க் கழுவினுச் சியினில்வைத்
திடுவோனே

கமுகினுட் குலைபறக் கதலியிற் கனியுகக்
கழையின்முத் தமுதிரக் கயல்குதித் துலவுநற்
கணவெயிற் றிகழ்திருக் கரபுரத் தறுமுகப்
பெருமாளே.

விநாயகமலை.

100. தனதன தானன தானன
தனதன தானன தானன
தனதன தானன தானன—தனதான.

சரவணசாதா நமோநம
கருணையதீதா நமோநம
சத்தளபாதா நமோநம

அபிராம

கருணாகரா நமோநம
நிருபமர் வீரா நமோநம
சமதளவூரா நமோநம சகதீசா

பரமசொரூப நமோநம
சுரபதிபூபா நமோநம
பரிமளநீபா நமோநம உமைகாளி

பகவதிபாலா நமோநம
இகபரமூலா நமோநம
பவுருஷசீலா நமோநம அருள்தாராய்

இரவியு மாகாச பூமியும்
விரவிய தூளேறவானவ
ரெவர்களுமீடேற எழ்கடல் முறையோவென்

றிடர்படமாமேருபூதர
மிடிபடவேதாளிசாசர
ரிகல்கெடமாவேகநீடயில் விடுவோனே

மரகத ஆகார ஆயனு
முரணிய ஆகார வேதனும்
வசுவெனு மாகாரஈசனு மடிபேண

மயிலுறை வாழ்வே விநாயக
மலையுறை வேலா மகீதர
வனசா ராதாரமாகிய பெருமாளே.

---

## திருத்தணிகை.

101. தனன தானதந் தனன தானதந்
தனன தானதந் — தனதான.

பகலிராவெனுங் கருவியாவணம்
பருகியாவிகொண் டுடல்பேணிப்
பழையவேதமும் புதியநூல்களும்
பல்புராணமுஞ் சிலவோதி
பகலநீளமென் றளவுகூறவும்
பொருளிலேயமர்ந் தனவோரை
அசடர்மூகரென் றவலமேமொழிந்
தறிவிலேனழிந் திடலாமோ
சகலலோகமும் புகலநாடொறுஞ்
சலிகிலாதசெங் கழுநீரும்
தவளநீபமும் புனையுமார்பதென்
தணிகைமேவுசெங் கதிர்வேலா
சிகரபூதரந் தகரநான்முகன்
சிறுகுவாசவன் சிறைமீள
திமிரசாகரங் கதறமாறரஞ்
சிதறவேல்விடும் பெருமாளே.

102. தத்ததத்த தத்ததத்த தத்ததத்த தத்ததத்த
தத்ததத்த தத்ததத்த — தனதான.

பொறபதத்தி னைத்துதித்
தற்பதத்தி லுற்றபத்தர்
பொற்புரைத்து நெக்குருக்க வறியாதே

புத்தகப்பி தற்றைவிட்டு
வித்தகாத்து ணைத்துதித்த
யுத்தியிற் கலக்கமற்று நினையாதே
முற்படைத்த லத்துதித்த
பிற்படைத்த கிர்த்யமுற்றி
முற்கடைத்த வித்துநித்த முழல்வேனை
முட்டவிக்க டைப்பிறப்பி
னுட்கிடப்ப தைத்தவிர்த்து
முத்திசற் றெனக்களிப்ப தொருநாளே
வெற்பளித்த நற்பரைக்கு
டப்பறத்தை யுற்றளித்த
வித்தகர்த்தபெற்றகொற்ற மயில்வீரா
வித்தைத்தவ முத்தமிழ்ச்சொ
லத்தசத்தம் வித்தரிக்கு
மெய்த்திருத் தணிப்பொருப்பி லுறைவோனே
கற்பகப்பு னக்குறத்தி
கச்சடர்த்த சித்ரமுற்ற
கற்புரத்தி ருத்தனத்தி லணைவோனே
கைத்தரக்கர் கொத்துகச்சி
னத்துவச்ர னுக்கமைத்த
கைத்தொழுத நித்துவிட்ட பெருமாளே.

103 தனதனனதந் தனதனனதந் தனதனனதந்—தன
[தான.
கனமடவார்த்தந் சிலையதனலுங்
கலைவினையாலுங் கரைம்மேல

கருதியகாயம் பெருகியதோயங்
கருதிலையானுஞ் சிலையானுங்
கொலைதருகாமன் பலகணையானுங்
கொடியிடையார்நின் றலையாதே
குறவணிநீடும் சரவணிநீடுங்
குளிர்பதநீதந் தருள்வாயே
சிலைமகனையன் கலைமகனையன்
திருமகனையன் றொருவேலா
தினைவனமானுங் கனவளமானுஞ்
செறிவுடன்மேவுந் திருமார்பா
தலைமலைமீதின் புலவருலாவுந்
தனியினில்வாழ்செங் கழுநீரே
டணியவர்கூறுந் தளிகெடநாளுந்
தனிமயிலேறும் பெருமானே.

104. தத்ததன தத்ததன தத்ததன தந்ததன
தத்ததன தத்ததன—தனதான.

வெற்றிசெய வுற்றகழை விற்குதைவளைத்துமதன்
விட்டகணைபட்ட விசையாலே
விட்டவெளி யிற்றெருளில் வட்டமணை யிற்கனல்வி
ரித்தொளிபரப்பு மதியாலே
பற்றிவரை கற்றபல தந்தையார் தமக்குமியை
பட்டதிகிரிக்கு மணியாதே
பத்தியை யெனக்கருளி முத்தியை யளித்துவளர்
பச்சைமயிலுற்று வரவேணும்

நெற்றிவழி பட்டெரிய நட்டமிடு முத்தமர்பி
 னைக்குமளமொத்த கழல்வீரா
செய்க்கமல மொக்குமுலை மொய்க்குறவி யிச்சையுற
 நித்தமிறுகத்த ழுவுமார்பா
எற்றிய திருச்சலதி சுற்றிய திருத்தணியி
 லெப்பொழுதுநிற்கு முருகோனே
எட்டசல வெட்டநில முட்டமுடி நெட்டசுர
 ரிட்டசிறைவிட்ட பெருமாளே.

---

105. தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
 தனத்தனத் தனத்தனத்—தனதானு.

அருக்கிமெய்த்தனைச்சிறித் துருக்கியிட்டுளக்கருகத்
 தமிழ்த்ததறக் கறித்தகட் டயிலாலே
யழைத்ததப் படுத்திமொட்டைலப்பொருட்பறித்தவர்க்
 கடுத்துவத்தமற்றுவித் தகர்போலத்
தருக்குமித் தருக்குமெய்க் கதித்துவப்ர சித்தியெத்
 தலத்துமற் றிலைப்பிறர்க் கெனுஞானம்
கழுத்துரைத் திமைப்பினிற் சடக்கனற் படிப்பறத்
 தடுக்குமிப் பிறப்பினைத் தவிரேனோ
பொருப்படைத்திரைக்கடற் பரப்பக்கர் பட்டபொற்
 பொருப்பெனக் குவித்ததிற் பலபேய்கள்
பொசிப்பெனக் குதித்திடப் படைத்தகற்பகப்புரிக்
 கிரக்கம்வைத்த பொற்ப்ரபைக் கதிர்வேலா

திருத்தமுத் தமிழ்க்கவிக் கொருத்தமைச்சிறுக்கியைத்
திணைப்புனக் கிரித்தலத் திடைதோயுந்
திறத்தகுக்கிடக்கொடிச் செருக்கவுற்பலச்சுனைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே.

106. தனனதான தானன தனனதான தானன
தனனதான தானன—தானன.

உடலினூடுபோய்மீளு முயிரினூடுமாயாத
உணர்வினூடு வானூடு முதுதீயூ
டலைவுநீரூடு புலியினூடு வாதாடு
மொருவரோடு மேவாத தனிஞானச்
சுடரினூடு நால்வேத முடியினூடுமூடாடு
துரியவாகுலாதீத சிவரூபம்
தொலைவிலாத பேராசை துரிசறுதவோர்பேதை
தொடுமுபாய மேதோசொ லருள்வாயே
மடலறாத வாரீச அடவிசாடி மாறான
வரிவரால் குவால்சாய அமராட
மதகுசாவி மீதோடி யுழவரா லடர்தோடி
மடையையோதி யாறோடு தடமாகக்
கடல்புகா மகரமீனை முடுகிவாளை தாண்மேவு
கமலவாவி மேய்வீழு மலர்வாவி
கடவுலநீல மாறாத தணிகைகாவ லாவீர
கருணைமேருவேதேவர் பெருமாளே.

---

107. தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன—தனதானா.

ஓலையிட்டகுழைச்சிகள் சித்தி
ரூபமொத்தநிறத்திகள் விற்கணை
யோடிணைத்தவிழிச்சிகள் சர்க்கரையமுதோடே
ஊறியொத்தமொழிச்சிகள் புட்குர
லோடுவைத்துமிழற்றுமிடற்றிகள்
ஓசைபெற்றதுடிக்கொளிடைச்சிகள் மணம்வீசும்
மாலையிட்டமுடிச்சிகள் முத்தணி
வாரமுற்றதனத்திகள் சித்திர
மால்விளைத்துமனத்தையழித்திடு மடமாதர்
மார்பலைத்துமருட்டியிருட்டறை
வாவெனப்பொருள் பற்றிமயக்கிடு
மாதருக்குளருத்தமிருப்பது தணியாதோ
வேலைவற்றிட நற்கணைதொட்டலை
மீதடைத்துவலிப்படைவிட்டுற
வீரரக்கன்முடித்தலைபத்தையு மலைபோல
மீதறுத்துநிலத்திலடித்துமெய்
வேதலட்சுமியைச்சிறைவிட்டருள்
வீர அச்சுத னுக்குநலற்புத மருகோனே
நீலவிட்களி நிர்க்குணிநித்தில
வாரிமுத்துநகைக்கொடிசித்திர
நீலரத்தின மிட்டஅறக்கிளி புதல்வோனே

நீலதிட்டுநி னைப்பவர் புத்தியில்
நேசமொத்தஅ ளித்தருள்சற்குரு
நீர்வளைத்த திருத்தணிவெற்புறை பெருமாளே.

---

108. தனனதன தனதந்த தனனதன தனதந்த
தனனதன தனதந்த—தனதானா.

முலைபுளகமெழ அங்கை மருவுசரிவளைகொஞ்ச
முகிலனைய மகில்பொங்க அமுதான
மொழிபதற அருமந்த விழிகுவியமதிகொண்ட
முகம்வெயர் வுறமன்ற லணையூடே
கலைநெகிழ்வளர்வஞ்சி யிடைதுவளவுடலொன்று
படவிருகியிதயங்கள் பரியமேகூர்
கலவிகரையழிமின்ப அலையிறலைபடுகின்ற
கவலைகெட நினதன்பு பெறுவேனோ
அலையெறியுமெழில்கண்ட உததிவயிலழல்மண்ட
அதரவெடிபடஅண்ட மிமையோர்கள்
அபயமெனநடுகின்ற அசுரர்படஅடியுண்டு
அவர்கள்முனைகெடநின்று பொரும்வேலா
தலைமதியநதிதும்பை யிளவறுகுகமழ்கொன்றை
சடைமுடியிலணிகின்ற பெருமானார்
தருகுமரவிடைவந்து தலையாவுதொழுகின்ற
தணிமலையிலுறைகின்ற பெருமாளே.

109. தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன—தனதான.

சோணித்த தெந்தனை சிறுமணை வளவுடல்
செறித்த தெத்தனை வடலென வுயிர்செய்த
செயித்த லெத்தனை திரையகலென்பல வதும்பாத
செமித்த தெத்தனை மலைசனை யுடல்கிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு [தான்
செடித்திலெத்தனை நமனுயிர் கொடுபோனதளவோ
மனத்தி லெத்தனை யிகதுசப டுகள்குரு
கெடுத்த தெத்தனை மிர்கமத மெனபல
வகைத்த தெத்தனை யளவிலைவிதிகர மொழியாமம்
வகுத்த தெத்தனை மகடனை யுலையனை
படைக்கு லத்தனை மதிய திரவிகனை
மலர்ப்ப தத்திளி லுருகவு மிணையடி தருவாயே
தனத்த தனதத் தனதன தனதன
திமித்தி திமித்திமி திமிதிமி திமி
தகுக்கு குக்குகு குகுகுகு குகுகுகு தகுதீதோ
தரித்த ரித்தரி ரிரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டுடுடுடு டுடுடுடு
தமித்த மத்தள தமருக விருதொளி கடல்போலச்
சினத்த மர்க்கள செருதிகி கிருகிய
கிழித்தி டக்கரி யசுரர்கள் பதிசிலை
தெரித்திடக்கழு கரிதினைமிசை பொரும்வேலா

செழித்த வுத்தமர் சிவசிவ னெனசர
வொழித்த வற்புத மலர்கொடு பரவிய
திருத்தணிப்பதி குறமகள் மருவிய பெருமாளே.



110. தன தனத்தன தன தனத்தன
தன தனத்தன—தன தான.

மலைமுலைச்சியர் கயல்விழிச்சியர்
மதிமுகத்தியர் அழகான
மயில்நடச்சியர் குயில்மொழிச்சியர்
மன துருக்கிய ளைமீதே
கலைநெகிழ்த்தியே உறவணைத்திடு
கல்வியிற்றுவள் பிணிதீராக்
கசடனைக்குண அசடனைப்புகல்
கதியில் வைப்பது மொருநாளே
குலகிரிக்குல முருவவிட்டமர்
குலவுசித்திர முனைவேலா
குறவர்பெற்றிடு சிறுமியைப்புணர்
குமரசற்குண மயில்வீரா
தலமதிற்புக லமரருற்றிடர்
தனையகற்றிய அருளாளா
தருநிறைத்தெழு பொழில்மிகுத்திடு
தனிமலைக்குயர் பெருமாளே.



111. தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன—தனதானா.

கிரிமினர்வளர் முலைமிசை துகிலிடு
கபடநாடக முயல்பல ரசடிசகள்
கெதியாளர்க ளிடமுடைபுடலினர் விரகாலே
கிளரவேகனை யணைமிசை தழுவிகள்
அமுதநாறிய லளிதமென வசனிகழ்
கிடையின்மேனமனமுருகிடுபடி றுகள் பொருளாலே
பரிவிலாமயல் கொடுசமர் புரிபவர்
அதிகபாயொரு பொருள்கரு பவரொடு
பழயபேரென விதமுற வணைபவர் விலையாலே
பசழிபோல்விடு வினைகவர் திருடிகள்
தமையொணுவகை யுறுகதி பெறும்வகை
பகரமாமயின் மிசைவர ரிணைவது மொருநாளே
அரியராதியர் மலரய னிமையவர்
நிலைபெறுதிடர் படவுடன் முழுகிய
வசுரர்தாமிற வயில்விடு மறுமுக விளையோனே
அரியகானக முறைகுற மகளது
கணவனாகிய வறிவுள விதரண
வமரர்நாயக சரவணபவதிற லுடையோனே
தருமநீதியர் சதுர்விதம றையுளர்
தவருறாநிலை பெறுதவ முடையவர்
களர்விலாமன முடையவ ரறிவினர் பாராசர்

சகலலோகமு முடையவர் நினைபவர்
பரவுதாமரை மலரடி யினிதுற
தணிகைமாமலை மணமுடியழகிய பெருமாளே.

---

112. தனதத் தந்தனதத் தனதத் தந்தனதத்
தனதத் தந்தனதத்—தனதான.

பொருவிக்கந்தொட்டார்ச் செருவிக்கன்றுருமிப்
புதுமைப்புண்டரிகக் கணையாலே
புளகக்கொங்கையிடத் திளகிக்கொங்கையனற்
பொழியத்தென்றல்துரக் குதலாலே
தெருவிற்பெண்கள்மிசைச் சருவிச்சண்டையிடத்
திரியத்திங்களுதிப் பதனாலே
செயலற்றிங்கணையிற் றுயிலற்றசிடுமித்
தெரியவைக்குன்குரவைத் தரவேணும்
அறிவுக் குன்றடையப் பரவிச் செந்தினைவித்
தருமைக்குன்றவருக் கெளியோனே
அசுரர்க்கங்கயல்பட்டமரர்க்கண்டமளித்
தயில்கைக்கொண்டதிறற் குமரேசா
தருவைக்கும்பதியிற் றிருவைச்சென்றணுகித்
தழுவிக்கொண்டபுயத் திருமார்பா
தளரச்சங்குவயற் றிரளத்தங்குதிருத்
தணிகைச்செங்கழனிப் பெருமாளே.

---

113. தனதத்த தனத் தனதத்த தனத்
தனதத்த தனத்——தனதானா.

தகைமைத்ததனியிற் பகைகற்றுறுகைத்
தனுமுட்டவனைப் பதனாலே
தரளத்திரளிற் புரளக்கரளத்
தமரத்திமிரக் கடலாலே
யுகைமுத்தமிகுத்த தெனப்பகல்புக்
கொளிமகட்குழிகைப் பொழுதாலே
யுரையற்றுணர்வற் றுயிரெய்த்தகொடிக்
குனையுற்றனையத் தரவேணும்
திகைத்துப்புயகங் கமலத்தனைமுற்
சிறையிட்டபதத் திறல்வீரா
திகழ்கற்பகமிட்டவனுக்ககனத்
திருவக்குருகிக் குழைமார்பா
பகலக்கிரணப் பணரச்சடிலப்
பரமற்கொருசொற் பகர்வோனே
பழனப்பொழில்கற் றுதிருத்தணிகைப்
பதியிற்குமரப் பெருமானே.

---

114. தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத்——தனதானா.

கிளிமொழிக் கிறுதரைப் பொறிவழிச் சிறுதுரைக்
கெழிபிறப் புறவிழிக் கிறபார்வைக்

கெடுமடைக் குருடரைத் திருடரைச் சயமதர்க்
கிகடமைச் செறிதலுற் — றறிவேது
மறிதலற் றறைதலற் றவதலுற் றறிநாதற்
றரவுகெக் கிழிதருக் — கடலூடே
யமிழ்தலுற் றமர்தலுற் றறிதலுற் றழிதலுற்
றடியிணைக் கணுகிடப் — பெறுவேனோ
பொறியிடைச் செழியன்வெப் பொழிதரப் பொறியி
லெப்பொறித் தலைச் சமணரைத் — தலைபெறும்
பொடிமணச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் — புலவோனே
தறிவளைத் துறநகைப் பொறியெழப் புரமெரித்
தவர்திருப் புதல்வநற் — கனைவேந்
தணிமணிக் குறிந்தளைவமலறத் தருக்கெருத்
தணிமலைச் சரவணப் — பெருமானே.

---

115. தனதனத் தனத்தனத்
தனதனத் தனத்தனத்
தனதனத் தனத்தனத் — தனதானா.

கனத்தறப் பணைத்தபொற் கழைப்புயத் தனக்கிரிக்
கனத்தையொத் தமொய்த்தமைக் — குழலார்தங்
கறுத்தமைக் கயற்கணிற் கறுத்துவைத் தொருத்த
னிக் கழற்பதத் தடுத்திடற் — கறியாதே
பிணிப்பிணக்களைத்து மெய்த்திருப்பெனத் திருத்தி
யைத் திசைத்தசைத் — தசைதேயா

லெடுத்தபொய்ச் சடத்தினைப்பொறுக்கு மிறப்பிறப்ப
தெனக்குமித் தமுத் தியைத் தரவேணும்
பனைத்தறச் சினத்திபத் தினைத்துறத் தரக்கனைப்
பயத்தினிற் பயப்படப் பொரும்வேலா
பருப்பதச் சினத்திபத் தினைத்துறத் தரக்கனைப்
படைத்தருக் கிடக்கொடிக் குயரேசா
தினைப்புனப்பொருப்பதத் தினிற்குடிக் குறத்தியை
செருக்குறத் திருப்புயத் தணைவோனே
திருப்புறப் புரத்தினிற் றிருக்காறுமித் தலத்
திருத்திசைத் திருத்தணிப் பெருமாளே.

116. தனன தனன தான தன தனன தான
தனன தனன தான—தன தானு.

உடையவர்களேவ ரெவர்களெனநாடி
யுளநெகிழவாசு கவிபாடி
யுமது புகழ்மேரு கிரியளவுமான
தெனவுரமுமான மொழிபேத
நடைபழகிமீள வறியவர்கள் நாளை
நடவுமெனவாடி முகம்வேறாய்
நலியமுனமே யுன் அருணவொளிவீசு
நளின இருபாத மருள்வாயே
விடைகொளுருவுபாகர் விமலர்திரிசூலர்
விகிர்தர்பரயோகர் நிலவோடே
விளவுகிறுபூளை நகுதலையொடாறு
விடவரவுசூடு பதிபாரச்

சடையிறைவர்காண உமைமகிழஞான
தனர்நடையிடாமுன் வருவோனே
தவமலருநீல மலர்சுனையநாதி
தணிமலையுலாவு பெருமாளே.

---

117. தாந்தன தத்த தனத்த தனத்தன
தாந்தன தத்த தனத்த தனத்தன
தாந்தன தத்த தனத்த தனத்தன—தனதான.

கூந்தலவிழ்த்தா டிதுமிதுக்கிகள்
பாய்ந்தவிழிக்குழை யிட்டி[illegible]டிகள்
கோம்புபடைத்தமொழி[illegible] ச[illegible]பரத்தையர் பு[illegible]தே
கோங்குபடைத்த த[illegible]முத்திகள்
வாஞ்சையுறத்தழு விச்[illegible]றுடையவர்
கூன்பிறையொத்த நக[illegible] வைப்பவர் பலநாளும்
சந்தபொருட்பெற இ[illegible]யுரைப்பவ
ராந்துணையற்றமு கைக்[illegible]ட்டவ
[illegible]ங்கிசையுற்றவ லக்குணமட்டைகள் பொருள்தீரில்
ஏங்கியிடைக்கடை யிற்றனிவைப்பவர்
பாங்கலக்க ருணைக்கழல்பெற்றிட
சந்திலெயெப்படி நற்கதிபுக்கிட வருள்வாயே
காந்தள் மலர்த்தொடையிட்டெதிர் விட்டொரு
வேந்துகுரக்கரணத்தொடுமெட்டிடு
ஞாண்டிய அச்சுதனுத்தமநற்குணன் மருகோ[illegible]

காங்கிசைமிக்கம றக்கொடி வெற்றியில்
வாங்கியமுக்கனி சர்க்கரைமொக்கிய
காண்கனிமுற்கியல் கற்பகமைக்கரி யிளையோனே
தேந்தினைவித்தின ருற்றிடவெற்றிலை
வேங்கைமரத்தெறிலைக்கொடுநிற்பவ
தேன்சொலியைப்புணாபுணமுற்றுறை குவைவானக்
கீண்டுகழைத்திர ளூற்றதுதற்றுடு
வேங்கைகனிற்குவ ளைச்சுனைசுற்றல
சேர்ந்ததிருத்தணி கைப்பதிவெற்புறை பெருமாளே.

திருச்செந்தூர்.

118. தன்ன தனத்தனத்த தன்ன தனத்தனத்தனத்த
தனன தனந்தனத் — தன தான.

மொழியதி றங்கறுத்து மகரவி னங்கலக்கு
முடியவளைந்தாற்று கடலாலும்
முதிரவிடம்பரப்பி வடைவமுகந்தழற்குள்
முருகியெழுந்திருங்கு நிலவாலும்
மழையளசந்தரித்த கொடியிடைவஞ்சியுற்ற
மயலுதணியும்படிக்கு நினைவாயே
மரகததுங்கவெற்றி விகடநடங்கொள்சித்திர
மயிலினில்வந்துமுத்தி தரவேணும்
அழகியமென் குறத்தி புளகிதசந்தனத்தி
னமுததனம்படைத்த திருமார்பா
அமரர்புரந்தனக்கு மழகியசெந்திலுக்கு
மருணைவளம்பதிக்கு மிறையோனே

எழுபுவனம்பிழைக்க அசுரர்சிரந்தெறிக்க
எழுசயிலந்துளைத்த சுடர்வேலா
இரவிகளிந்திரத்தர் அரியரபங்கயத்த
ரிவர்கள்பயந்தவிர்த்த பெருமாளே.

119. தானத்தானன தானத்தானன
தானத்தானன—தந்தகான.

சேமக்கோமள பாதத்தாமரை
சேர்தற்கோதும னந்தவேதா
தீதத்தேயவி ரோதத்தேகுண
சீலத்தேமிக அன்புறாதே
காமக்ரோதவி லோபப்பூதவி
காரத்தேயழி கின்றமாயா
காயத்தேபசு பாசத்தேசிலர்
காமுற்றேயும் தென்கொலோதான்
நேமிச்சூரொடு மேருத்தூளெழ
நீளக்காளப யங்ககால
நீலக்ரீபக லாபத்தேர்விடு
நீயச்சேவக செந்தில்வாழ்வே
ஓமத்தீவழு வார்கட்கூர்சிவ
லோகத்தேதரு மங்கைபாலா
யோகத்தாறுப தேசத்தேசிக
ஊமைத்தேவர்கள் தம்பிரானே

120. தந்தன தனந்தனந் தனதனத்
தந்தன தனந்தனந் தனதனத்
தந்தன தனந்தனந் தனதனத்—தனதான.

அந்தகன் வருந்தினம் பிரகிடச்
சந்தத முவந்துசென் றறிவையர்க்
கஞ்சுற மசங்கதந் தவிரமுக் குணமான

வந்திபக லென்றிரண் டையுமொழித்
திந்திரிய சஞ்சலங் களையறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்

செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெ ருகுந்தடந் தெளிதரத் தணியாத

சிந்தையு மகிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய வருந்தருந் தழியமெய்ச்
சிந்தைவா வென்றுநின் றரிசனப் படுவேனோ

கொந்தவிழ் சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறவறக் கருமாள

குன்றிடி யவம்பொனின் றிருவரைக்
கிங்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்துநின் குழைகளிற் ப்ரபைவீசத்

தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான

சங்கரி மனக்குழைந் துருகமுத்
தந்தர வழிந்தொழுந் தவர்கடைச்
சந்ததி க்கந்தொழுஞ் சரவணப் பெருமாளே.

---

121. தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்—தனதான

கருப்பந்தங் கிரத்தம்பொங்
கழைப்புண்கொண் டிருக்கும்பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே

கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறி

செருத்தண்டந் தரித்தண்டம்
புகத்தண்டந் தகற்கென்றுந்
திகைத்தைந்தின் செகத்தஞ்சுங் கொடுமாயும்

தியக்கங்கண் டுயக்கொண்டென்
பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே

அருக்கன்சஞ் சரிக்குத்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா

அளிச்சங்கங்கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொங
தளிக்குஞ்செந் திலிற்றங்கும் குமரேசா
புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையுட்குந்தஞ் சுதனைப்
புணர்க்குமறந் தினைக்குஞ் செந்
தினைப்பைப்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங்கையிற்றுஞ்சும் பெருமாளே.

122. தானதான தனந்தன தந்தன
தானதான தனந்தன தந்தன
தானதான தனந்தன தந்தன—தனதானு.

மாயவாடை திமிர்ந்திடு கொங்கையின்
மூடுசீலை திறந்து மழுங்கிகள்
வாசல்தோறுநடந்து சிணிங்கிகள் பழையோர்மேல்
வால்நேய நினைந்தழுவம்பிக
ளாசைநோய்கொண் டருந்திடு சண்டிகள்
வாரபேர்பொருள் கண்டுவிரும்பிக ளெவரேனு
நேயமேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசிலாதவர் தங்களையன்பற
நீதிபோல நெகிழ்ந்த பரம்பிக ளவர்தாய்மார்
நீலிநாடகமும்பயில் மண்டைகள்
பாளையூறுக ளுண்டிடு தொண்டிகள்
நீசரோடுமிகணங்குகடம்பிக ளுறவாமோ

பாபுமாமத தந்திமுகம்பெறு
மாதிபாரத மென்றபெருங்கதை
பாசமேருவி லன்றுவரைந்தவ னிளையோனே
பாவையாள்குற மங்கைசெழுந்தன
பாரமீதில ணைந்துமுயங்கிய
பாகமாகிய சந்தனகுங்கும மணிமார்பா
சீயமாயுரு வங்கொடுவந்தசு
ரேசன்மார்பையி டந்துபசுங்குடர்
சேரவாரிய ணிந்தநெடும்புயல் மருகோனே
தேனுலாவுக டம்பமணிந்தகி
ரீடசேகர சங்கரர்தந்தருள்
தேவநாயக செந்திலுகந்தருள் பெருமாளே.

---

123. தனன தந்தன தனன தந்ததந்த தந்த
தனன தந்தன—தனதான.

மூலமுகந்திமிர்ந்த கலவையுந்துலங்கு
முறுவலுஞ்சிவந்த கனிவாயும்
முருகவிழ்ந்துதிர்ந்த மலர்களுஞ்சரிந்த
முகிலுமின்பசிங்கி விழிவேலும்
சிலைமுகங்கலந்த திலதமுங்குளிர்ந்த
திருமுகந்ததும்பு குருவேர்வும்
தெரியவந்துநின்ற மகளிர்பின்சுழன்று
செயலழிந்துழன்று திரிவேனோ

மலைமுகந்துகைந்த புலவர் செஞ்சொல்கொண்டு
வழிதிறந்தசெங்கை — வடிவேலா
வளர்புனம்பயின்ற குறமடந்தை கொங்கை
மணிவடம்புதைந்த — புயவேளே
அலைமுகந்தவழ்ந்து சினைமுதிர்ந்தசங்க
மறிவந்துகந்து — மலர்மீதே
அளிகலந்திரங்க இசையுடன் துயின்ற
அரியசெந்தில்வந்த — பெருமாளே.

---

124. தனதன தனதன தந்தத் தந்தத்
தனதன தனதன தந்தத்தந்தத்—தனதானா.

பரிமள களபசு கந்தச்சந்தத் — தனமாதர்
படையம படையென அந்திக்குங்கட் — கடையாலே
வரியளி நிரைமுரல் கொங்குக்கங்குற் — குழலாலே
மறுகிடு மருளனை யின்புற்றன்புற் — றருள்வாயே
அரிதிருமருகக டம்பத்தொங்கற் — றிருமார்பா
அலைகுமுமுகுவென வெம்பக்கண்டித் — தெறிவேலா
திரிபுரதகனரும் வந்திக்குஞ்சற் — குருநாதா
ஜெயஜெய ஹரஹர செந்திற்கந்தம் — பெருமாளே.

---

தந்தத் தனதன தந்தத் தனதன
125 தந்தத் தனதன—தனதானா.

வஞ்சத்துடனொரு நெஞ்சிற் பலவினை
வஞ்சிக்கொடி யிடை — மடவாரும்

வந்திப்புதல்வரும் வந்திக்கிளையுடன்
மண்டிக்கதறிடு வகைகூர
அஞ்சக்கலைபடு பஞ்சிப்புழுவுடல்
அங்கிக்கிரையென வுடன்மேவ
அண்டிப்பயமுற வென்றிச்சமன்வரும்
அன்றைக்கடியினை தரவேணும்
கஞ்சப்பிரமனை அஞ்சத்துயர்செய்து
கன்றைச்சிறையிடு மயில்வீரா
கண்டொத்தனமொழி அண்டத்திருமயில்
கண்டத்தழகிய திருமார்பா
செஞ்சொற்புலவர்கள் சங்கத்தமிழ்தெரி
செந்திற்பதிநக ருறைவேனே
செம்பொற்குவடகுன்றைக்கடவிடை
செந்திப்பொரவல பெருமாளே.

---

126. தந்ததன தந்ததந்த தந்ததன தந்ததந்த
தந்ததன தந்ததந்த—தனதான.

கண்டுமொழி கொம்புகொங்கை
வஞ்சியிடை அம்புநஞ்சு
கண்கள்குழல் கொண்டலென்று பலகாலும்

கண்டுளம் வருந்திநொந்து
பங்கையர் வசம்புரிந்து
கங்குல்பக லென்றுநின்று விதியாலே

பண்டைவினை கொண்டுழன்று
வெந்துவிழுகின்றல் கண்டு
பங்கயபதங்கள் தந்து — புகழோதும்
வண்புடைய சிந்தையன்பர்
தங்களிலுடன் கலந்து
பண்புபெற அஞ்சலஞ்சல் — எனவாராய்
வண்டுபடுகின்ற தொங்கல்
கொண்டறநெருங்கியுண்டு
வம்பினை யடைந்தசந்தின் — மிகமூழ்கி
வஞ்சியை முனிந்தகொங்கை
மென்குற மடந்தைசெங்கை
வந்தழகுடன் கலந்த — மணிமார்பா
திண்டிறல் புனைந்தவுண்டர்
தங்கள் பபங்கள் கண்டு
செஞ்சுடர் புனைந்துதுங்க — மயில்மீதே
சென்றசுர ரஞ்சவென்று
குன்றிடை மணம்புணர்ந்து
செந்தில்நகர் வந்தமர்ந்த — பெருமாளே.

127. தானதனதான தானந்தனந்த
தானதனதான தானந்தனந்த
தானதனதான தானந்தனந்த—தனதான

மூளும்வினைசேர மேல்கொண்டிடாஐந்து
பூதம்வெறாத மாயங்கள் தானெஞ்சில்
மூடிநெறிநீதி யேதுஞ்செயாவஞ்சி — யதிபார

மோகவினைவான போகஞ்செய்வேனண்டர்
தேடஅரியாத ஞேயங்களாம்நின்ற
மூலபரயோக மேல்கொண்டிடாநின்ற துளதாகி

நாளுமதிவேக காலகொண்டுதீமண்ட
வாசியனலூடு போயொன்றி வானின்க
ணாமமதிமீதி லூறுங்கலாவின்ப அமுதூறல்

நாடியதன்மீது போய்நின்றஆனந்த
மேலைவெளியேறி நீயின்றிநானின்று
நாடியினும்வேறு தானின்றிவாழ்கின்ற பெருமாளே.

காளவிடமூணி மாதங்கிவேதஞ்சொல்
பேதைநெடுநீலி பாதங்களால்வந்த
காலன்விழமோது சாமுண்டிபாரம்பொ டனல்வாயு

காதிமுதிர்வான மேதங்கிவாழ்வஞ்சி
யாடல்விடையேறி பாகங்குலாமங்கை
காவிநடமாடி நாளன்பாதம்வந்து தொழுமாது

வாளகுழு தாளுமோர் தண்டுழாய்தங்கு
சோதிமணிமார்ப மாலின்பிறைளின்சொல் [னை
வாழுமுமைமாதராள் மைந்தனையெந்தை பிள்ளையோ

மாசில்அடியார்கள் வாழ்கின்றவூர்சென்று
தேடிவிளையாடி யேயங்ஙனேநின்று
வாழுமயில்வீரனே செந்தில்வாழ்கின்ற பெருமாளே.

---

128. தந்தன தானன தானன
தந்தன தானன தானன
தந்தன தானன தானன—தன தான.

கொம்பனையார் காதுமோதிரு
கண்களிலாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு
மொங்கையி னீராவிமேல்வளர்
செங்கழுநீர் மாலைசூடிய
கொண்டையிலாதார சோலையில் மருளாதே
உம்பர்கள் ஸ்வாமிநமோநம
எம்பெருமானே நமோநம
ஒண்டொடிமோகா நமோநம எனநாளும்
உன்புகழே பாடிநானினி
அன்புடனாசார பூஜைசெய்
துய்ந்திடவீணாள் படாதருள் புரிவாயே
பம்பரமேபோல ஆடிய
சங்கரிவேதாளநாயகி
பங்கயசீபாத நூபுரி கரசூல
பங்கமிலா நீலிமோடிப
யங்கரிமாகாளி யோகினி
பண்டிசுரபான சூரனொ டெதிர்போர்கண்
டெம்புதல்வாவாழு வாழியே
னும்படிவீறான வேல்தர
என்றுமுளான மனோகர வயலூரா

இன்சொல்விசாகாக் ருபாகர
செந்திலில்வாழ்வாகி யேயடி
யென்றனையீடேற வாழ்வருள் பெருமாளே.

129 தந்ததானன தனதன தனதன
தந்ததானன தனதன தனதன
தந்ததானன தனதன தனதன—தனதான.

பஞ்சபாதக முறுபிறை யெயிறெரி
குஞ்சிகூர்விட மதர்விழிபிலவக
பங்கவாண்முக முடுகியநெடுகிய திரிசூலம்
பந்தபாசமு மருவிய காதல
மிஞ்சிநீடிய கழிமுகி லுருவொடு
பண்பிலாதொரு பகடதுமுதுகினில் எமராசன்
அஞ்சவேவரு மவசர மதிலொரு
தஞ்சமாயிவண் வழிவழியரும்பெறு
மன்பினானுன தடிபுக ழடிமைத னெதிரேநீ
யண்டகோளகை வெடிபட டிடிபட
வெண்டிசாமுக மிடிதரநடமிடு
மந்தமாருத மயில்மிசை நொடியினில் தருவாயே
மஞ்சுபோல்வள ரளகமு மிளகிய
ரஞ்சிதாம்ருது வசனமு நிலவென
வந்து தாயவெண் முறுவலுமிருகுழை யளவோடு
மன்றனீலமு மழகிய
குன்றமேவுவர் மடமக ளிளமுலை
மந்தராசல மிசையி லழகிய மணவாள

